மலர் 14 இதழ் 289 NAVAMANI (Tamil Daily) MADRAS 4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897 Phone No. 76190, 76199

"நவமணி"
சந்தா விபரம்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் மற்றும் ஏஜண்டு மூலம் | தபால் மூலமாக |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 6-00 | ரூ. 6-60 |
| 3 மாதம் | ரூ. 18-00 | ரூ. 20-00 |
| 6 மாதம் | ரூ. 36-00 | ரூ. 40-00 |
| 1 வருடம் | ரூ. 72-00 | ரூ. 80-00 |


# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 3-7-74 புதன் வெளியூர் 4-7-74 வியாழன்



## கச்சத் தீவுப் பிரச்னை:

# தமிழ்நாடு முழுதும் துக்க தினம்

## ம. பொ. சி. கோரிக்கை



சென்னை, ஜூலை 3—கச்சத்தீவு பற்றி பாராளுமன்றத்தில் விவாதம் நடக்கும்போது தமிழகம் முழுவதும் கறுப்புச் சின்னம் அணிந்து துக்க தினம் அனுஷ்டிக்க வேண்டும். இதை தமிழக அரசே முன் நின்று நடத்தவேண்டும் என்று ம. பொ. சி., தி. மு. க. அரசுக்கு கோரிக்கை விடுத்தார்.

தமிழக சட்டசபை, மேலவை இரண்டையும் உடனே கூட்டி மத்திய அரசைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்ற வேண்டும் என்றும் ம.பொ.சி. கோரினார்.

கச்சத் தீவு பிரச்னையை சர்வதேச கோர்ட்டிடம் விடலாம் என்றும் அவர் ஆலோசனை கூறினார்.

நேற்று நடந்த லட்சுமிபுரம் இளைஞர் சங்க கூட்டத்தில் ம. பொ. சி. பேசியதாவது:

கச்சத்தீவு பிரச்னையில் ஏதேனும் செய்தாகவேண்டும். என்னசெய்வது என்று தெரியவில்லை. அநீதி இழைத்தவர்களை எட்டி உதைத்து நம் ஆட்சேபத்தை தெரிவிக்க வேண்டும். தவறு செய்த டெல்லிக்கு தழும்புஏற்படுத்த வேண்டும். இதை கருணாநிதி அரசு செய்யவேண்டும்.

மத்திய அரசைக் கண்டித்து நாம் போராட்டம் நடத்தலாம். காலையில் கைது செய்து மாலையில் விட்டுவிடுவார்கள். இப்படி கண்ணாமூச்சி விளையாட தயாரில்லை.

தி. மு. கழக அரசு கச்சத்தீவு பிரச்னையில் இன்னும் வேகமாக, விறுவிறுப்பாக நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

உடனடியாக தமிழக சட்டசபை மேலவையை கருணாநிதி கூட்ட வேண்டும். காலம் நிர்ணயித்து கருத்துக் கேட்க வேண்டும். மத்திய அரசுக்கு நம் எதிர்ப்பைகாட்டி திருத்த முதல்வர் முன் வரவேண்டும்.

கச்சத்தீவை கொடுத்ததைக் கண்டித்து மூக்கையா தேவர் பார்லிமெண்டில் தீர்மானம் கொண்டுவர வேண்டும். பார்லிமெண்டில் இது பற்றி விவாதம் நடக்கவேண்டும்.

பார்லிமெண்டில் இது பற்றிய விவாதம் நடக்கும் போது தமிழகம் முழுமையும் துக்கநாள் கொண்டாட வேண்டும்.

இதை தமிழக அரசே முன் நின்று நடத்த வேண்டும். அன்று எல்லோரும் கறுப்புச் சின்னம் அணிந்து நமக்கு சொரணை இருக்கிறது என்று காட்டவேண்டும்.

கடல் ஆதிக்க எல்லை ஆய்வு மூலம் இந்தப் பிரச்னை என்றால் இதை சர்வதேச கோர்ட்டிடம் விடலாம். அல்லது ஐ. நா. சபை மூலம் தீர்வு பெறலாம்.

கச்சத் தீவை இலங்கையோ, அல்லது வேறு எந்த நாடோ யுத்த தளமாக பயன்படுத்தினால் ஒப்பந்தம் ரத்து என்ற ஷரத்தை ஒப்பந்தத்தில் சேர்க்கவேண்டும்.

குறைந்தபட்சம் இந்தியா, இலங்கை இரண்டின் கூட்டுப் பொறுப்பிலாவது கச்சத் தீவு இருக்கவேண்டும்.

கச்சத்தீவு பிரச்சினையால் மாநில சுயாட்சியில் நாம் மத்திய ஆட்சிக்கு விட்டுத் தரும் பாதுகாப்பு, வெளி நாட்டு உறவு போன்றஅதிகாரங்களை மத்தியில் விட்டு வைக்கலாமா என்ற ஐயப்பாடும்எழுந்திருக்கிறது. இது பற்றியும் யோசிக்கவேண்டி இருக்கிறது.

மாநிலங்களுக்குரிய பாதுகாப்பை மத்திய அரசு தருமா என்ற ஐயம் வந்துவிட்டது.

போரிட்டு நாட்டுப் பகுதியை இழப்பது வழக்கம். சூதாடி இழப்பது வழக்கம். ஆனால் இவர்கள் ஒப்பந்தம் செய்து இழந்து இருக்கிறார்கள்.

இதற்கும் தருமன் சூதாடி நாட்டை இழந்ததற்கும் என்ன வித்தியாசம்?

அன்று பலமான மத்திய அரசாக இருக்கவேண்டும் என்பதற்காக பாகிஸ்தானை விட்டுக்கொடுத்தார்கள்.

அதற்கு பிறகு 30 ஆயிரம் சதுரமைல்களை ஆசாத் காஷ்மீரில் கைவிட்டார்கள்.

சீனா படையெடுப்பால் 13 ஆயிரம் சதுர மைல்கள் சீனா பிடித்துக்கொண்டது. இரண்டும் சேர்ந்தால் தமிழகம் அளவு இருக்கும். இதற்குப் பிறகு பெருபாரி.

### சூதாடி அரசு

இவர்கள் பூபாலர்கள் அல்ல; சூதாடிகள்.

கச்சத்தீவில் மனிதர்களே இல்லை. வெறும் பாறை என்று சொல்கிறார்கள். சிங்களத்தவர்களுக்கும் அப்படித்தானே இதற்கு ஏன் சிலோன் பிடிவாதம் செய்கிறது?

இந்தியாவின் மானம் அந்த மண்ணில் இருக்கிறது. இந்தியாவின் மணம் அந்த மண்ணில் இருக்கிறது.

இத்தனை அவலட்சணங்களுக்கும் திருஷ்டிப் பொட்டு போல கச்சத் தீவைக் கொடுத்து இருக்கிறார்கள்.

இவ்வளவையும் செய்[illegible]வர்களை அல்லவா ராஜினாமா செய்யச் சொல்ல வேண்டும்.

இந்திராகாந்திக்கு மாமியார் புத்தி எப்படி வந்ததோ தெரியவில்லை. மரியாதைக்குக் கூட தமிழ்நாட்டைக் கேட்கவில்லை.

இப்படியே விட்டுவிட்டால் தமிழகத்தையே இலங்கை கேட்டால் தாரைவார்த்துக் கொடுத்துவிடுவார்கள் என்றார் ம. பொ. சி.

---

மூக்கையா தேவர் யோசனை

## பாராளு மன்றத்தில் அணில்

கச்சத்தீவு தமிழகத்திற்கு சொந்தம் என்று நிரூபிக்க அணில் ஒன்றை பாராளு மன்றத்தில் காட்ட யோசித்து வருவதாக மூக்கையா தேவர் (எம். பி.) கூறினார்.

நேற்று நடந்த லெட்சுமிபுரம் கூட்டத்தில் கச்சத்தீவு தமிழகத்திற்கு சொந்தம் என்பதற்கு பல ஆதாரங்களை அவர் வெளியிட்டார்.

மூக்கையாதேவர் பேசியதாவது:—

கச்சத்தீவு சிறு பருபோன்றது. அதுவே விஷப் பருவாக ஆகக்கூடும்.

பாகிஸ்தான் பிரிவினையால் காந்திஜி உயிர் போயிற்று.

சீனா ஆக்கிரமிப்பால் நேருஜி உயிர் போயிற்று. கச்சத்தீவு பிரச்னையால் யார் உயிர் போகப் போகிறதோ?

கச்சத்தீவு தமிழர்க்குச் சொந்தம் என்பதற்குசரித்திர சான்று வேண்டுமா? சாஸ்திர சான்று வேண்டுமா? தத்துவ சான்று வேண்டுமா? அனுபவச் சான்று வேண்டுமா?

ராமாயணத்தில் ராமன் அணை கட்டியபோது அணை கட்ட அணில்கள்கூட உதவின. அந்த அணிலை அன்புடன் ராமர் தடவிக்கொடுக்க அது அதன் முதுகில் மூன்று கோடுகளாக விழுந்து இருக்கின்றன. அந்த அணிலையே சான்றாக பாராளுமன்றத்திற்கு எடுத்துச் சென்று காட்டலாமா என்று பார்க்கிறேன்.

கச்சத்தீவில் சாயம் தயாரிக்கும் அவுரிச் செடிகளைப் பயிரிட ராமநாதபுரம் ராஜா காண்டிராக்ட் விட்டு இருந்தார்.

பல முஸ்லீம்கள் காண்டி

(1-ம் பத்தி பார்க்க)

5-ம் பத்தி தொடர்ச்சி

ராக்ட் எடுத்து இருந்தார்கள் இன்னும் பலர் அந்த ரசீதுகளை வைத்திருக்கிறார்கள்.

கச்சத்தீவில் இருக்கும் அந்தோணியார் கோவிலைக் கட்டியவன் தமிழன்.

தொண்டியைச சேர்ந்த மீனவர்தான் அந்தோணியார் கோயிலைக் கட்டினர். அதற்கும் சான்றுஇருக்கிறது.

1947-ம் ஆண்டில் கச்சத் தீவை ராமநாதபுரம் ராஜா மத்திய அரசிடம் ஒப்படைத்தார்.

அதுபற்றிய முழு தஸ்தாவேஜுகளையும் மத்திய அரசிடம் ஒப்படைத்து இருக்கிறார்.

கச்சத்தீவை நாம் விட்டுவிட்டால் சேது சமுத்திர திட்டத்திற்கு ஆபத்து. அது கைவிடப்பட்டதாகவே பொருள். அதனால்தான் மத்திய அரசு இதுபற்றி மவுனமாக இருக்கிறது.

எந்த போராட்டம் செய்தாவது கச்சத்தீவை நாம் பெற்றே தீரவேண்டும். போராடியே தீரவேண்டும்.

கச்சத்தீவை இலங்கைக்கு கொடுத்ததால் சீன ஆபத்து இருக்கிறது. சீனாவை திருப்திபடுத்தவே இலங்கைக்கு கச்சத்தீவை கொடுத்து இருக்கிறார்கள் என்றார் மூக்கையா தேவர்.

---

கச்சத்தீவை மீட்க

## 15-ந் தேதி முதல் ஜன சங்கம் போராட்டம்

சென்னை, ஜூலை 3—கச்சத்தீவை இலங்கைக்கு அளித்துள்ளதை எதிர்த்து இம் மாதம் 15-ந் தேதி முதல் போராட்டம் நடத்தப்போவதாக தமிழ்நாடு ஜன சங்க நிர்வாகக் குழு அறிவித்துள்ளது.

முதல் கட்டமாக பொதுக் கூட்டங்களும், எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களும் நடத்தப்படும் என்று அக்கட்சி கூறியுள்ளது.

---

## கச்சத்தீவு பிரச்னை: மத்திய அரசை எதிர்த்து தி. மு. கழகம் வழக்கு

சென்னை, ஜூலை 3—கச்சத் தீவை இலங்கைக்குக் கொடுத்ததை எதிர்த்து மத்திய அரசு மீது நீதி மன்றத்தில் வழக்குத் தொடர தி. மு. கழகம் ஏற்பாடு செய்து வருகிறது.

சென்னை உ[illegible]தி மன்றத்திலோ அல்லதுசுப்ரீம்கோர்ட்டிலோ வழக்குத் தொடரப்படும்.

இதற்கான ஏற்பாடுகளை திமுக முன்னாள் எம்.பி. தில்லை வில்லாளன் செய்துவருகிறார்.

இந்த தகவலை நேற்று மாலை லெட்சுமிபுரம் வாலிபர் சங்கத்தில் நடந்த கச்சத் தீவு பற்றிய கூட்டத்திற்குத் தலைமை வகித்துப் பேசிய போது தில்லை வில்லாளன் அறிவித்தார்.

நீதி மன்றத்தில் கச்சத் தீவு பிரச்னைக்குப் பரிகாரம் காண முடியும். சென்னை உயர்நீதி மன்றத்திலும் வழக்குத் தொடர முடியும். டெல்லியில் உள்ள சுப்ரீம் கோர்டிலும் தொடரமுடியும். நீதி மன்றத்தில் இந்த விஷயம் பற்றி பார்த்துவிட வேண்டியதுதான் என்று தில்லை வில்லாளன் தெரிவித்தார்.

கச்சத்தீவு பற்றி நீதிமன்றத்தில் வழக்குத் தொடர தில்லைவில்லாளன் தேவையான தஸ்தாவேஜுகளை தம்மிடம் கேட்டதாக அந்தக் கூட்டத்தில் பேசிய பார்வர்டு பிளாக் தலைவர் மூக்கையா தேவர் (எம். பி.) தெரிவித்தார்.

ராமநாதபுரம் ராஜாவிடம் தேவையான தஸ்தாவேஜுகளைக் கேட்டு [illegible]ருப்பதாகவும் அவைகள் வந்து கொண்டு இருப்பதாகவும் மூக்கையா தேவர் தெரிவித்தார்.

---

## "கச்சத் தீவுக்காக போராட்டம் கூடாது": பக்தவத்சலம் பேட்டி

சென்னை, ஜூலை 3— கச்சத் தீவு பிரச்னையில் போராட்டம் நடத்த முதலமைச்சர் கருணாநிதி முற்படுவது சரியல்ல என்று முன்னாள் முதலமைச்சர் பக்தவத்சலம் கூறினார்.



இன்று சென்னையில் நடந்த நிருபர்கள் கூட்டம் ஒன்றில் அவர் பேசினார்.

பக்தவத்சலம் கூறியதாவது:

"கச்ச[illegible], இந்தியாவில் இருந்ததில்லை. அது தகராறுக்குள்ள பகுதியாக இருந்தது. கச்சத்தீவுமீது கருணாநிதி எப்போதாவது சுயாதிபத்திய உரிமையை பிரயோகித்தாரா?

கச்சத்தீவு பற்றி ஒப்பந்தம் ஏற்பட்டு, அது தீர்ந்துபோன விஷயமாக ஆகிவிட்டது.

முன்பு தமிழ்நாட்டுக்கு வந்து முதலமைச்சர் கருணாநிதியைச் சந்தித்துவிட்டுச் சென்ற இலங்கை தமிழரசு கட்சித் தலைவர் செல்வநாயகமும் இந்த ஒப்பந்தத்தை வரவேற்றுள்ளார்.

இப்போது இந்தப் பிரச்னையில் போராட்டம் நடத்தப் போவதாக முதலமைச்சர் கூறுவது சரியல்ல. இந்த சிறிய விஷயத்[illegible] பெரிதுபடுத்தக்கூடாது. தமிழர்களின் மதிப்பு பாதிக்கப்படக் கூடிய எந்த நடவடிக்கையையும் எடுக்கக்கூடாது. இந்தப் பிரச்னையானது, போராட்டத்திற்குரிய விஷயம் அல்ல" என்றார் பக்தவத்சலம்.

அண்ணா தி. மு. க. வின் தோழமைக் கட்சியான கம்யூனிஸ்டு கட்சி, கச்சத் தீவு ஒப்பந்தத்தை வரவேற்றுள்ளதை பக்தவத்சலம் சுட்டிக் காட்டினார். தி. மு. கழகத்தைவிட அண்ணா தி. மு. கழகம் இந்த பிரச்னையில் அதிக தீவிரம் காட்டுவதைக் குறிப்பிடுகையில், இப்பிரச்னையை அரசியல் பிரச்னையாக ஆக்குவதில் பயன் இல்லை என்றார் பக்தவத்சலம்.

### அரசியல் சட்டம்

அரசியல் சட்டத்தை பின்பற்றுவதாக வாக்குறுதி அளித்துவிட்டு பதவியோற்ற முதலமைச்சர் கருணாநிதி, இப்போது அந்த அரசியல் சட்டம் நன்றாக இல்லை; அதை அடியோடு மாற்ற வேண்டும் என்று கூறுவது சரியல்ல என்றார் பக்தவத்சலம்.

### தமிழர் படை

தமிழர் படை, தமிழர் பேரவை ஆசியவை மீது கடும் [illegible]வடிக்கை எடுக்க தமிழ்நாடு முதலமைச்சர் முன்வர வேண்டும் என்று பக்தவத்சலம் கூறினார். தமிழர் படைக்கும், தமக்கும் சம்பந்தம் இல்லை என்று முதலமைச்சர் கூறிய விளக்கம் போதாது என்றும், மறைமுகமாக தமிழர் படைக்கு அவர் அனுமதி அளிக்கிறாரோ என்ற சந்தே[illegible] ஏற்படலாம் என்றும் [illegible]வே இந்த சந்தேகத்தை கருணாநிதி போக்கவேண்டும் என்றும் பக்தவத்சலம் தெரிவித்தார்.

### புது காங்கிரசில் பிளவா?

கச்சத்தீவு பிரச்சினை சம்பந்தமாக புது காங்கிர[illegible] கட்சியில் பிளவு இல்லை என்றும், தமது கருத்தை புது காங்கிரஸ் எம்.எல்.ஏ. யான மாரிமுத்து பின்னர் ஏற்றுக்கொண்டு விட்டார் என்றும் பக்தவத்சலம் கூறினார். முதலமைச்சர் கருணாநிதி கூட்டிய சட்டமன்ற சர்வகட்சித் தலைவர்கள் கூட்டத்தில் மாரிமுத்து கலந்து கொண்டு, கச்சத்தீவு ஒப்பந்தத்திற்கு எதிர்ப்பு தெரிவித்திருந்தார்.

---

## சுப்பிரமணியம்: தற்காலிக விவசாய மந்திரி

புதுடெல்லி, ஜூலை 3—இதுவரை பக்ருதீன் அலி அகமது கவனித்து வந்த விவசாயத்துறை தற்காலிக அடிப்படையில் இப்போது மத்திய தொழில் அபிவிருத்தி மந்திரி சி. சுப்பிரமணியத்திடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

பிரதமர் இந்திராவின் ஆலோசனையின் பேரில் இந்த இலாகாவை ஜனாதிபதி கிரி, மந்திரி சுப்பிரமணியத்திடம் அளித்துள்ளார்.

இதுவரை மத்திய விவசாய மந்திரியாக இருந்த பக்ருதீன் அலி அகமது மந்திரி பதவியை ராஜினாமா செய்துள்ளார். அவருடைய ராஜினாமாவை ஜனாதிபதி கிரி இன்று பெற்றுக்கொண்டார்.

புதிய ஜனாதிபதி தேர்தலில் போட்டியிட பக்ருதீன் அலி அகமது புது காங்கிரஸ் கட்சியின் வேட்பாளராக நிறுத்தப்படுவதால் அவர் மந்திரி பதவியை ராஜினாமா செய்துள்ளார்.

---

8 பேர் நிபந்தனை தளர்த்தப்பட்டது

## சென்னையில் தங்க முனுசாமிக்கு அனுமதி: ஹைகோர்ட் தீர்ப்பு

சென்னை, ஜூலை 3—மாநகராட்சி சம்பளப் பட்[illegible]யல் மோசடி சம்பந்தமாக கைதாகி ஜாமீனில் புதுவையில் தங்கியிருக்கும் முன்னாள் மேயர் முனுசாமி சென்னைக்கு வரலாம் என்று உயர்நீதி மன்றம் அனுமதியளித்திருக்கிறது.

இதுபோல் வெளியூரில் தங்கியிருக்க வேண்டும் என்ற மேலும் 7 பேர்களின் நிபந்தனைகளும் தளர்த்தப்பட்டன.

வி. முனுசாமி, சாரங்கன், மணிவண்ணன், எம். எஸ். ராமச்சந்திரன், ஆதிகேசவலு ஆகியோர் புதுவையிலும், மைனர் மோசஸ் மதுரையிலும், குப்புசாமி நாகர்கோயிலிலும், டி. எஸ். ஜீவரத்தினம் ஹரூரிலும் தங்கியிருக்க வேண்டும் என்று நிபந்தனை விதிக்கப்பட்டிருந்தது.

இந்த 8 பேர்களும் தாங்கள் நீண்ட நாட்கள் வெளியூரில் இருந்து வருவதாகவும் ஆகையால் சென்னையில் தங்கியிருக்க தங்களை அனுமதிக்கவேண்டுமென்றும் சென்னை உயர்நீதி மன்றத்தில் முறையிட்டிருந்தனர்.

இவர்களின் மனுக்களைஇன்று விசாரித்த நீதிபதி சோமசுந்தரம் இந்த 8 பேரும் இனிமேல் சென்னைக்கு வரலாம் என்று அனுமதி யளித்தார்.

இந்த வழக்கு சம்பந்தமான குற்றப் பத்திரிகை இன்னும் 2 மாதங்களில் தாக்கல் செய்யப்படும் என்று அரசாங்க [illegible] ஏ. ஆர். [illegible] நீதிபதியிடம் தெரிவித்தார்.

---

## "பிரும்மச்சாரி இயக்கம்": விநோபா யோசனை

[illegible]ர்தா கஞ்ச், ஜூலை 3—ஒரு குடும்பத்தில் மூன்று பிள்ளைகள் இருந்தால் அவர்களில் ஒருவர் ஆயுள் காலம் பூராவும் பிரும்மச்சாரியாகவே இருக்கவேண்டும் என்று சர்வோதய இயக்கத் தலைவரான விநோபா பாவே யோசனை கூறியுள்ளார்.

நாட்டில் ஜனத்தொகையைக் கட்டுப்படுத்த "பிரும்மச்சாரி [illegible]யக்கம்" ஒன்றுதான் ஒ[illegible] வழி என்றும் விநோபா கூறினார்.

விநோபா கூறியயோசனையை குஜராத் முன்னாள் கவர்னரான ஸ்ரீமன் நாராயண் தெரிவித்தார்.

விநோபாவிடம் [illegible] பேசிக் கொண்டிருந்த போது அவர் தம்மிடம் இவ்வாறு சொன்னதாக ஸ்ரீமன் நாராயண் கூறினார்.

அரசாங்கம் குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டத்தை நாடு பூராவிலும் அமுல்படுத்தி வந்த போதிலும் ஜனத்தொகை தொடர்ந்து அதிகரித்துக் கொண்டுதான் வருகிறது. நாடு பூராவிலும் பிரும்மச்சாரி இயக்கத்தைக் கைக்கொண்டால்தான் ஜனத்தொகைப் பெருக்கப் பிரச்சினைக்குத் தீர்வுகாண முடியுமென்று விநோபா கூறினார்.

"25 வயதுக்கு முன்னதாக யாரும் திருமணம் செய்து கொள்ளக்கூடாது. 40 வயதுக்கு மேற்பட்டவர்கள் தாம்பத்திய உறவைக் கைவிட்டுவிடவேண்டும்" என்றும் வி[illegible] கூறினார்.

---

## சேலம் கம்யூனிஸ்ட் தலைவர் மரணம்

சேலம், ஜூலை 3—சேலம் மாவட்ட வலது கம்யூனிஸ்ட் தலைவர்களில் ஒருவரும், பல தொழிற்சங்கங்களுக்கு தலைவருமான ஜி. சாமுவேல் இன்று காலை மாரடைப்பால் [illegible]. [illegible] வயது 74.

## விஷ ஊசி வழக்கில் சலூன் கடைக்காரர் சாட்சியம்:

# ‘காகிதப் பொட்டலத்தில் ஏராளமான பணம்’

**சென்னை, ஜூலை 3—எழும்பூர் ரெயில் நிலையத்தில் ரெயிலில் உட்கார்ந்திருந்த பெரியவரை வைத்தியும், சாரதியும் அழைத்து வந்ததாகவும், அவரிடம் காகிதப் பொட்டலத்தில் ஏராளமான பணம் இருந்ததாகவும் சலூன் கடைக்காரர் தியாகு சாட்சியம் அளித்தார்.**

விஷ ஊசி போட்டு, 7 பேரைக் கொன்று, கொலை, கொள்ளை போன்ற குற்றங்களை புரிந்ததாக குற்றஞ்சாட்டப்பட்ட வைத்தி, மற்றும் 7 பேர் மீதான வழக்கு விசாரணை நேற்று 19-வது நாளாக சென்னை செசன்சு கோர்ட்டில் நடைபெற்றது.

முன்னதாக இவ்வழக்கில் ராமனுதன் கட்டியிருந்த கைக்கெடிகாரத்தை அடகு வாங்கிய மதன்லால் என்கிற அடகுக்கடைக்காரர், கோபாலின் தமக்கையின் கணவருக்குச் சொந்தமான டாக்சியை ஓட்டிவந்த டாக்சி டிரைவர் செல்லையா, வைத்தியின் மாமனுருக்கு சொந்தமான அனுமந்தபுரத்தில் உள்ள ஐம்புலிங்க முதலியார் சத்திரத்தில் காவலாளியின் மகன் அருணுசல முதலியார், ஹோட்டல்-டி-பிராட்வேயில் கேஷியராகப் பணி புரிந்த முகம்மது தம்பி ஆகியோர் சாட்சியமளித்தனர்.

### மயக்கமான நிலையில் இருந்தார்

நேற்று, திருக்கழுக்குன்றம் துணை சப்-இன்ஸ்பெக்டராக பணி புரியும் பச்சையப்பன் 11-வது சாட்சியாக சாட்சியமளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:—

நான் 70-71-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் செங்கல்பட்டு தாலுக்கா காவல் நிலையத்தில் தலைமை போலீஸ்காரராக இருந்தேன்.

20—12—70 மாலை 5 மணிக்கு சென்னேரி, பஞ்சாயத்து போர்டு தலைவர் ரங்கநாதன் ஒரு புகார் கொடுத்தார்.

சென்னேரி பஞ்சாயத்து எல்லைக்குள் உள்ள ஒரு சுடுகாட்டில், மூச்சு, பேச்சில்லாமல், 25 வயது மிக்க ஒரு வாலிபர் கிடந்ததாகவும், மாட்டுக்கார பையன் மூலம் தகவல் தெரிந்ததாகவும், செங்கல்பட்டு அரசாங்க மருத்துவமனையில் சேர்த்து விட்டு வந்ததாகவும், தெரிவித்திருந்தார்.

நானும், சப்-இன்ஸ்பெக்டரும் மருத்துவமனைக்குச் சென்று பார்த்தோம். அந்த ஆள் மயக்க நிலையில் பேசமுடியாமல் இருந்ததால் வாக்கு மூலம் வாங்கமுடியவில்லை. அதன் பிறகு மாலை 7 மணிக்கு மீண்டும் சென்று பார்த்தோம். அப்பொழுதும் அந்த நபர் மயக்க நிலையிலேயே இருந்தார். அன்று இரவே இறந்து விட்டதாக எங்களுக்கு தகவல் வந்தது.

அதன் பிறகு சப்-இன்ஸ்பெக்டர் வழக்கு பதிவு செய்தார். நான் சப்-இன்ஸ்பெக்டர், ஒரு போலீஸ்காரருடன் மருத்துவமனைக்கு சென்றோம். அங்கு பிரேதத்தை புகைப்படம் எடுத்தோம். அதன் பிறகு பிரேத பரிசோதனை செய்தோம். இறந்து போனவரின் கைரேகைகளை பதிவு செய்து கொண்டோம்.

(இறந்து போன ராமனுதனின் ஆடைகளை வக்கீல் காட்டியபோது, இது அந்நபரின் உடலில் இருந்து எடுத்த ஆடைகள் தான் என்று கூறினர்.”

2-1-71-ல் சுப்ரமணிய செட்டியார் என்பவருடன் 7, 8 பேர் வந்தனர். அவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள கிழுவயல் கிராமத்தில் இருந்து வந்துள்ளதாக கூறினர்.

### வடிவேலு அணிந்த உடைகள் தான்

அவர்கள் ஒரு புகைப்படத்தை எங்களிடம் கொடுத்தனர். அவர்கள் கொடுத்த புகைப்படமும், நாங்கள் எடுத்த புகைப்படமும் ஒத்து இருந்தன. இறந்து போனவரின் ஆடைகளை அவர்களிடம் காட்டியபோது, ராமனுதன் என்கிற வடிவேல் செட்டியார் அணிகின்ற உடைகள் தான் என்று கூறினர்.

ரகசிய போலீசார் வந்து என்னிடம் இது விவரங்கள் பற்றி விசாரித்தார்.

அடுத்து, ராமனுதன் செட்டியார் உடலை புதைத்த போலீஸ்காரர் கண்ணையன் சாட்சியம் அளித்தார். அப்பொழுது அவர் கூறியதாவது:—

நான் செங்கல்பட்டு தாலுக்கா காவல் நிலையத்தில் போலீஸ்காரராக இருக்கிறேன்.

22—1—72 அன்று நானும் சப்-இன்ஸ்பெக்டரும் மருத்துவமனைக்கு பிரேதப் பரிசோதனைக்குச் சென்றோம். பிறகு சப்-இன்ஸ்பெக்டர் அந்த பிரேதத்தை ‘போஸ் மார்ட்டம்’ செய்யும் டாக்டரிடம் எடுத்துப்போகச் சொன்னர். பிரேதத்தை டாக்டரிடம் கொடுத்து, ‘போஸ் மார்ட்டம்’ செய்யும்பொழுது நானும் உடன் இருந்தேன்.

### சுடுகாட்டில் புதைத்தேன்

இரண்டுநாள் சென்றதும் யாரும் உடலைக்கேட்டு வராததால், மருத்துவமனைக்கு அருகில் உள்ள சுடுகாட்டில் புதைத்துவிட்டேன்.

பன்னிரண்டு தினங்கள் கழித்து சுப்பிரமணிய செட்டியார் என்பவர் எங்கள் காவல்நிலையத்திற்கு வந்தார். அவர் ஒரு புகைப்படத்தைக் காட்டினர். நாங்கள் எடுத்து வைத்திருந்த புகைப்படமும் அதுவும் ஒன்ருக இருந்தன. சுப்பிரமணிய செட்டியார் புகைப் படத்தைப் பார்த்துவிட்டு தன்னுடைய பையன் தான் என்று கூறினர். அவனுடைய ஆடைகளைப் பார்த்துவிட்டு, அவை அவன் அணிந்திருந்த ஆடைகள் தான் என்று கூறினர். அவனுடைய பெயர் வடிவேல் என்று கூறினர்.

22-2-73-ல் ரகசிய போலீசார் வந்து, இது விபரமாக என்னை விசாரித்தனர்.

இவ்வாறு அவர் கூறினர். அவரை எதிரி வக்கீல்கள் குறுக்கு விசாரணை செய்தனர்.

### புகைப்படம் எடுத்தவர்

அடுத்து ராமநாதன் உடலை புகைப்படம் எடுத்த ஜார்ஜ் என்பவர் சாட்சியமளித்தார். அப்பொழுது அவர் கூறியதாவது:—

நான் பதினைந்து ஆண்டுகளாக செங்கற்பட்டில் ‘போட்டோ ஸ்டூடியோ’ நடத்தி வருகிறேன். (அரசாங்க வக்கீல் காட்டியபுகைப் படங்களைப் பார்த்துவிட்டு) இவற்றை நான்தான் எடுத்தேன். போஸ்மார்ட்டம் செய்த செங்கல்பட்டு மருத்துவக் கல்லூரி மருத்துவ மனையில், செங்கல்பட்டு தாலுகா காவல் நிலைய சப்-இன்ஸ்பெக்டர் சொன்னதின் பேரில் எடுத்தேன்.

இதன் ‘நெகடிவ்’ பிரதிகளை சப்-இன்ஸ்பெக்டரிடம் கொடுத்துவிட்டேன். இதற்காக எனக்கு ரூபாய் 30-50 கொடுத்தார்கள்.

சென்னையிலிருந்து ரகசிய போலீசார் இது விவரம்பற்றி என்னிடம் விசாரித்தனர்.

இவ்வாறு அவர் கூறினர். அவரை எதிரி வக்கீல்கள் குறுக்கு விசாரணைசெய்தனர்.

அடுத்து 14-வது சாட்சியாக ஹோட்டல் பையன் ஜபருல்லா காட்டிய கறுப்பு பண நபர்களை, வைத்தி, சாரதி, வேணு ஆகியோருக்கு அடையாளம் காட்டிய சலூன் கடைக்காரர் தியாகு சாட்சியம் அளித்தார் அவர் கூறியதாவது:

### ஒத்தாசை செய்தால் ரிவார்டு பணம்

முருகன் தியேட்டர் சமீபமாக, சேவியர் தெருவில் சொந்தத்தில் ஒரு சலூன் கடையை நடத்திவந்தேன். கீழக்கரையைச்சேர்ந்த மஜீத் (குற்றஞ் சாட்டப்பட்டவர்) எனக்கு நன்ருக பழக்கமானுர் மஜீத் எனக்கு தாவூத், அயூப் இருவரையும் அறிமுகப்படுத்தினர். தாவூத் மூலமாக வைத்தி எனக்கு பழக்கமானுர்.

1970-ம் ஆண்டு இறுதியில் தாவூத். அயூப் இருவரும், சாரதி, வேணு இருவரையும் காட்டி, ‘இவர்கள் கஸ்டம்ஸ் அதிகாரிகள்; இவர்களுக்கு கேஸ் பிடிக்க, நீ ஒத்தாசை செய்தால் ‘ரிவார்டு’ பணம் கிடைக்கும் என்று கூறினர். அப்பொழுது சாரதியும் ‘நாங்கள் சொல்லும் வேலையை நீ செய்தால்போதும். உனக்கு ரிவார்டு தருகிறேன்’ என்று கூறினர். நானும் சம்மதித்தேன்.

1970-ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஒரு நாள் தாவூத் என்னை வைத்தி கடைக்கு அழைத்துசெல்ல அங்கிருந்து சாரதி, வைத்தி, அயூப், மஜீத், தாவூத், நான் எல்லோரும் ஒட்டல் கிரசெண்ட் அருகே சென்றோம்.

அங்கு வந்த பஷீர் என்பவரிடம் அயூப், ஜபருல்லாவை அழைத்துவரச் சொன்னர். அயூப், சாரதி, ஜபருல்லா மூவருமாக தனியாக பேசிவிட்டு என்னை அழைத்து, ‘ஜபருல்லா ஹோட்டல்-டி-பிராட்வேயிலிருந்து இறங்கி வரும் ஆளை உனக்கு காட்டுவான். அந்த ஆளை பின்தொடர்ந்து வந்து சாரதிக்கு நீ அடையாளம் காட்ட வேண்டும்’ என்று அயூப் கூறினர்.

### டாக்சியில் பின்தொடர்ந்தேன்

பிறகு எங்கள் ஏற்பாட்டின்படி ஹோட்டல்-டி-பிராட்வேக்கு எதிரேயுள்ள பூங்கா அருகே நான் நின்றுக் கொண்

(4-ம் பக்கம் பார்க்க)

---

காதலனுடன் சேர்ந்து கணவனைக் கொன்றவள்:

# மஞ்சுளாவுக்கு ஆயுள் தண்டனை

**புனு, ஜூலை 3—காதலனுடன் சேர்ந்து, கணவனை கொன்றவளுக்கு, கோர்ட்டில் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது.**

அந்த பெண்ணின் பெயர் மஞ்சுளா. கணவன் பெயர் நாதுரம். புனு அருகில் உள்ள ஒரு கிராமத்தைச் சேர்ந்தவர்கள். மஞ்சுளாவுக்கும் அதே ஊரைச் சேர்ந்த காமத் என்ற வாலிபருக்கும் காதல் ஏற்பட்டது. இதைத்தொடர்ந்து காதலனுடன் சேர்ந்து, கணவனை இளம் பெண் கொன்று விட்டாள்,

புனு அடிஷனல் செசன்சு கோர்ட்டு, மஞ்சுளாவுக்கு ஆயுள் தண்டனை விதித்து தீர்ப்புக் கூறியது.

---

# ஒன்றரை லட்சம் சோப்பு பறிமுதல்

பாட்னு, ஜூலை 3—பீகாரில் பாட்னு நகரில் பதுக்கி வைக்கப்பட்டிருந்த சுமார் ஒன்றரை லட்சம் சோப்புக் கட்டிகளை அதிகாரிகள் கைப்பற்றியுள்ளனர்.

மாவட்ட அதிகாரிகள் சில பிரபல எண்ணெய் ஆலைகளின் கிடங்குகளைச் சோதனையிட்டு இந்த சோப்புக் கட்டிகளைக் கைப்பற்றினர்.

நகர மாணவர் போராட்டக் கமிட்டியினர் அளித்த தகவலின் பேரில் இந்த திடீர் சோதனைகள் நடத்தப்பட்டன.

சோப்பு விலை உயர்ந்து வருவதால் சோப்புக் கட்டிகளைப் பதுக்கி மேலும் விலை உயரும்படி செய்து பின்னர் கொள்ளை லாபத்தில் விற்கவே அவை பதுக்கப்பட்டிருந்ததாகக் கருதப்படுகிறது.

---

சென்னையில் மலாசிய பத்திரிகையாளர்கள்

## வி. ஜி. பி. நிறுவனம் வரவேற்பு

சென்னை, ஜூலை 3—சென்னைக்கு வந்துள்ள மலாசியா நாட்டுப்பத்திரிகையாளர்கள் குழுவுக்கு நேற்று மயிலாப்பூர் உட்லாண்ட்ஸ் ஓட்டலில் வி. ஜி. பன்னீர்தாஸ் சகோதரர்கள் நிறுவனத்தின் சார்பாக விருந்துபசாரம் நடத்தப்பட்டது.

தமிழ்நாடு சுற்றுலா வாரியத் தலைவர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி விழாவுக்குத் தலைமைவகித்துப் பேசுகையில், விமான மூலமாகவும், கப்பல் மூலமாகவும் சென்னைக்கு வரும் பயணிகளுக்கு சுங்கச் சோதனையை விரைவில் முடிக்கவேண்டியதன் அவசியம் பற்றி வற்புறுத்தினர்.

தமிழ்வாணன், மலாசிய பத்திரிகையாளர் தேவதாஸ், சேவியர் முதலானேர் பேசினர்கள். ஆரம்பத்தில் வி. ஜி. சந்தோஷம் அனைவருக்கும் நல்வரவு கூறினர்.

மலாசியா பத்திரிகையாளர்களுக்கு வி. ஜி. பி. நிறுவனத்தின் சார்பாக பன்னீர்தாஸ் சகோதரர்களின் தாயார், அன்பளிப்புகளை வழங்கினர்.

---

வட்டார அபிவிருத்தி அதிகாரிகளின் மாநாடு சென்னையில் நடைபெற்றது. தமிழக உள்ளாட்சித்துறை அமைச்சர் அன்பில் தர்மலிங்கம் அம் மாநாட்டில் கலந்துகொண்டு உரையாற்றினர்.



---

“ஜனதிபதி தேர்தலில் எனக்கு ஆதரவு கொடுங்கள்”

# எம்.எல்.ஏ, எம்.பி.க்களுக்கு காங்கிரஸ் வேட்பாளர் அகமது கடிதம் எழுதினர்

**புதுடெல்லி, ஜூலை 3—ஜனதிபதி தேர்தலில் போட்டியிடும் காங்கிரஸ் வேட்பாளரான பக்ருத்தீன் அலி அகமது, தமக்கு ஆதரவு அளிக்கும்படி கோரி, இந்த தேர்தலுக்கான வாக்காளர்களான எல்லா எம். எல். ஏ.க்களுக்கும், எம். பி.க்களுக்கும் தனித்தனியாக கடிதம் எழுதியிருக்கிருர்.**

இந்த தகவலை அவர் நேற்று டெல்லியில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

பக்ருத்தீன் அலி அகமது, அநேகமாக எல்லா மாநிலங்களுக்கும் விஜயம் செய்ய திட்டமிட்டிருக்கிருர்.

### காங்கிரஸ் தலைவருடன் சந்திப்பு

பக்ருத்தீன் அலி அகமது நேற்று மாலை டெல்லியில் புது காங்கிரஸ் தலைவர் சர்மாவைச் சந்தித்துப் பேசினர். வருகிற ஜனதிபதி தேர்தலுக்காக பக்ருத்தீன் அலி அகமது மேற்கொள்ள வேண்டிய தேர்தல் பிரசாரம் பற்றி இருவரும் விவாதித்தனர். கட்சி செயலாளர் சந்திரஜித் யாதவ், இந்த பேச்சுவார்த்தையில் கலந்து கொண்டார்.

### ராஜினமா

ஜனதிபதி தேர்தலுக்கான புது காங்கிரஸ்கட்சி வேட்பாளராக பக்ருதீன் அலி அகமது திங்கட்கிழமை இரவில் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டினல் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதைத் தொடர்ந்து அவர் மத்திய மந்திரி பதவியை உடனே ராஜினமா செய்தார்.

நேற்று புது காங்கிரஸ் தலைவர் சர்மாவைச் சந்தித்து பேசிய பிறகு பக்ருத்தீன் அலி அகமது, நிருபர்களுக்கு பேட்டி அளித்தார்.

வேட்பு மனு தாக்கல் செய்யும் வரை தாம் மந்திரி பதவியை ராஜினமாசெய்திருக்க வேண்டிய அவசியம் இல்லை என்று சிலர் கூறியுள்ளதாகவும், ஆனல் தேர்தலில் அரசாங்க யந்திரத்தை தவருன முறையில் பயன்படுத்தியதாக தம்மீது புகார் எதுவும் வராமலிருப்பதற்காகவே உடனே ராஜினமா செய்து விட்டதாகவும் நிருபர்களிடம் பக்ருத்தீன் அலி அகமது கூறினர்.

“மந்திரி பதவிப் பொறுப்பிலிருந்து இன்னும் ஒன்று அல்லது 2 தினங்களில் நான் விடுவிக்கப்படுவேன் என்று எதிர்பார்க்கிறேன்”, என்ருர் அகமது.

### பதக்குடன் பேச்சு வார்த்தை

பம்பாய்க்குப் போயிருந்த பக்ருத்தீன் அலி அகமது நேற்று காலை டெல்லிக்குத் திரும்பியவுடன் அவரை ஏராளமான பிரமுகர்கள் சந்தித்துப் பாராட்டுதல் தெரிவித்தனர்.

பின்னர் துணை ஜனதிபதி பதக்கை பக்ருத்தீன் அலி அகமது சந்தித்துப் பேசினர். துணை ஜனதிபதி பதவிக்கான தேர்தலில் மீண்டும் போட்டியிட சம்மதிக்குமாறு பதக்கை அகமது கேட்டுக்கொண்டதாகத் தெரிகிறது.

“ஜனதிபதி தேர்தலில் கிரியை மீண்டும் காங்கிரஸ் வேட்பாளராகத் தேர்ந்தெடுத்தால் தான், துணை ஜனதிபதி தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளராக மீண்டும் போட்டியிட நான் சம்மதிப்பேன்”, என்று பதக் முன்பு தெரிவித்திருந்தார்.

---

## ஜனதிபதி தேர்தலில் கிறிஸ்தவர் தலைவர் போட்டி

புதுடெல்லி, ஜூலை 3—ஜனதிபதி தேர்தலில் தாம் போட்டியிடப் போவதாக கிறிஸ்தவர் தலைவர் பி. எஸ். வாலஸ் அறிவித்துள்ளார். அகில இந்திய கிறிஸ்தவர்கள் கவுன்சிலின் தலைவராக அவர் இப்போது பணியாற்றிவருகிருர்.

சென்னை, பம்பாய் மற்றும் ஆந்திரப் பிரதேசத்தில் தமக்கு நல்ல ஆதரவு கிடைக்கும் என்று அவர் சொன்னுர்.

ஜனதிபதி தேர்தலில் போட்டியிடும் காங்கிரஸ் வேட்பாளர் அகமது அபரிமிதமான பெரும்பான்மையான ஓட்டுகளால் தேர்ந்தெடுக்கப்படுவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

---

## துணை ஜனதிபதி பதவிக்கு ஜாட்டி

துணை ஜனதிபதி பதவிக்கான தேர்தலில் போட்டியிடுவதற்கு காங்கிரஸ் வேட்பாளராக பி. டி. ஜாட்டி தேர்ந்தெடுக்கப்படுவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அவர் தற்போது ஒரிசா மாநில கவர்னராக பணியாற்றி வருகிருர்.

ஜாட்டி நேற்று டெல்லியில் புது காங்கிரஸ் தலைவர் சர்மாவைச் சந்தித்துப் பேசினர்.

---

## நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், ஜூலை 1—

| | | |
|---|---|---|
| ஆரம்ப | விலை | 53·70 |
| முடிவு | விலை | 55·20 |

நியூயார்க், ஜூலை 2—

| | | |
|---|---|---|
| ஆரம்ப | விலை | 55·70 |
| முடிவு | விலை | 54·01 |

---

# புது.காங்கிரசுடன் ஓரளவு உறவு: காமராஜருக்கு கட்சி மேலிடம் அனுமதி

**கல்கத்தா, ஜூலை 3—தமிழ்நாட்டில் புது காங்கிரசுடன் ஓரளவில் உறவு வைத்துக்கொள்ள காமராஜருக்கு கட்சி மேலிடம் அனுமதி அளிக்கும் என்று மேற்கு வங்க பழைய காங்கிரஸ் தலைவர் பி. சி. சென் தெரிவித்தார்.**

கட்சி மேலிடத் தலைவர்களுக்கும் காமராஜருக்கும் உள்ள கருத்து வேற்றுமைகளைத் தீர்ப்பது சம்பந்தமாக காமராஜருடன் பேச்சு நடத்த பி. சி. சென் இன்று சென்னை வருகிருர்.

கல்கத்தாவில் நடந்த பழைய காங்கிரஸ் மாநாட்டில் செய்த முடிவையொட்டி பி. சி. சென் சென்னை வருகிருர். அவருடன் மேற்கு வங்க பழைய காங்கிரஸ் பொதுச்செயலாளர் அசோக் கிருஷ்ணதத்தும் சென்னை வருகிருர்

பாண்டிச்சேரி தேர்தலின் போது தமிழ்நாடு பழைய காங்கிரஸ்—புது காங்கிரஸ் கட்சியுடன் செய்துகொண்ட கூட்டணி ஏற்பாடு குறித்து கட்சியில் காமராஜருக்கும் மற்ற தலைவர்களுக்கும் இடையே கருத்து வேறுபாடு உள்ளது என்பதை பி. சி. சென் கல்கத்தாவில் நிருபர்களிடம் பேசுகையில் ஒப்புக்கொண்டார். இக்கருத்து வேற்றுமை முற்றி விட்டதாகவும் அவர் சொன்னுர்.

புது காங்கிரஸ் கட்சியுடன் காமராஜர் ஓரளவிலான உறவு வைத்துக் கொள்வதை அனுமதித்து, அதே நேரத்தில் கல்கத்தா மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களுக்கும் பாதகம் இல்லாத வகையில் ஓர் ஏற்பாட்டை உருவாக்க முயற்சிப்பேன் என்ருர் பி. சி. சென்.

காமராஜரும், தமிழ்நாடு பழைய காங்கிரஸ் கட்சியினரும், கட்சியிலிருந்து விலகுவர் எனத் தோன்றவில்லை என்றும் பி. சி. சென் கூறினுர்.

---

## 'நேற்று-இன்று-நாளை'க்கு எதிர்ப்பு:

# "பரங்கிமலைத் திருடன்"

### எம். ஜி. ஆரின் வரலாற்றை சினிமாவாக தயாரிக்க தமிழர் பேரவை முடிவு

**சென்னை, ஜூலை 3—'பரங்கிமலைத் திருடன்' என்ற பெயரில் எம். ஜி. ஆரின் வாழ்க்கை வரலாற்றைத் தயாரிக்கத் தமிழர் பேரவை முடிவு செய்துள்ளது.**

**எம். ஜி. ஆர். நடித்து, வெளிவர இருக்கும் 'நேற்று - இன்று - நாளை' என்ற படத்துக்குத் தடை விதிக்கவேண்டும் என்றும் தமிழர் பாதுகாப்புப் பேரவை கோரியுள்ளது.**

தமிழகப் பெண்களை தாசி குலம் என்று எம். ஜி. ஆர். பேசியதைக் கண்டித்து, தமிழகம் முழுவதும் எம்.ஜி.ஆர். நடித்த படம் திரையிடப்படுவது நிறுத்தப்பட்டு வருவது தெரிந்ததே.

சென்னையில் கடந்த வாரம் முழுவதும், எம். ஜி. ஆர். நடித்த படம் எந்தத் தியேட்டரிலும் திரையிடப்படவில்லை.

### எம். ஜி. ஆர். படம் ரத்து

சென்னையில் பத்மநாபா தியேட்டரில், எம். ஜி. ஆர். நடித்த என் அண்ணன் படத்தை திரையிடுவதாக இருந்தார்கள்.

தமிழர் பேரவை அமைப்பாளர் பாலகிருஷ்ணன், துணை அமைப்பாளர்கள் தனபால், தங்கவேலு, நந்தகோபால், மணி, தாமோதரன், பார்வேந்தன் ஆகியோர் தியேட்டர் நிர்வாகிகளை சந்தித்து "எம்.ஜி. ஆர். படத்தை காட்டாதீர்கள்" என்று எதிர்ப்பு தெரிவித்தனர்.

இதன் காரணமாக, எம்.ஜி. ஆர். படம் திரையிடுவது நிறுத்தப்பட்டது.

அதற்கு பதிலாக, சிவாஜி கணேசன் நடித்த "தங்கப் பதக்கம்" படம் திரையிடப்பட்டது.

### நேற்று, இன்று நாளைக்கு தடை...?

"எம். ஜி. ஆர். நடித்த நேற்று இன்று நாளை படத்துக்கு தடை போடும்படி மத்திய சர்க்காருக்கு தமிழர் பாதுகாப்பு பேரவை தலைவர் பி. கே. முத்துராமலிங்கம் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

அறிக்கையில் அவர் கூறி இருப்பதாவது:—

"நேற்று இன்று நாளை" படம், தி. மு. க.வையும் தி மு க அரசையும் தாக்குவதற்கு என்றே எடுக்கப்பட்டதுபோல் தகவல் வந்துள்ளது. தமிழர்களை இழிவு படுத்தும் காட்சிகளும், வசனங்களும்இருப்பதாகத் தெரிகிறது. இந்தப் படம் வெளியானுல் மக்கள் எதிர்ப்புத் தெரிவிப்பதன்மூலம் கலவரம் ஏற்படலாம்.

எனவே, இப்படத்துக்கு தடைபோட வேண்டும்.

### "பரங்கிமலை திருடன்"

மாருக அதற்கு அனுமதி அளித்தால், எம். ஜி. ஆரின் சுயரூபத்தை விளக்கி, தமிழர் பாதுகாப்புப் பேரவை புரொடக்ஷன்ஸ் சார்பில் நாங்கள் "பரங்கிமலைத் திருடன்" என்ற பெயரில் ஒரு படம் எடுப்போம். அதற்கும் தணிக்கை குழு அனுமதி அளிக்கவேண்டும்.

"அதற்கு தணிக்கை குழு தயாரா?"

இவ்வாறு அறிக்கையில் பி. கே. முத்துராமலிங்கம் கூறியுள்ளார்.

---

### காரைக்கால் நகரசபை கூட்டம்: அ. தி. மு. க. வெளிநடப்பு

காரைக்கால், ஜூலை 3— காரைக்கால் நகரசபைக் கூட்டத்திலிருந்து அ. தி. மு. க. வலது கம்யூனிஸ்டு உறுப்பினர்கள் வெளிநடப்பு செய்தனர்.

காரைக்கால் நகரசபைக் கூட்டம் ஜூன் 26-ம் தேதி காலை நடைபெற்றது. கூட்டம் தொடங்கியதும் இதுவரையில் நகரசபைத் தலைவர் தேர்தலை புதுவை அரசு நடத்தாமல் இருப்பதைக் கண்டித்து அ. தி. மு. க. வைச் சேர்ந்த கே. காந்தி, கே. ராமன் வலது கம்யூனிஸ்ட்டு கட்சியைச்சேர்ந்த என்.ஜி. ராஜன் ஆகிய மூவரும் சபையிலிருந்து வெளி நடப்புச் செய்தார்கள்.

மொத்தம் 122 உறுப்பினர்களில் 10 பேர் முதலில் வந்திருந்தார்கள். வெளிநடப்பு செய்த உறுப்பினர் 3 பேர் போக எஞ்சியிருந்த 7 பேர்களைக் கொண்ட கூட்டம் தொடர்ந்து நடந்தது. எம். சுப்பிரமணியம் கூட்டத்திற்கு தலைமை வகித்தார். தீர்மானங்கள் பலநிறைவேற்றப் பட்டன.

### ஜனதிபதி தேர்தல் தி.மு.க. நிலை என்ன?

தூத்துக்குடி, ஜூலை 3— ஜனதிபதி தேர்தலில் திமுக. நிலை என்ன என்பதுபற்றி முதலமைச்சர் கருணாநிதி இங்கு நிருபர்களின் கேள்விக்கு பதிலளித்தார்

காங்கிரஸ் கட்சியின் வேட்பாளர் யார் என்று அறிவித்த பிறகுதான் தி மு கழகம் அதை பற்றி யோசிக்கும் என்று ஒரு நிருபரின் கேள்விக்கு பதிலளிக்கையில் கருணாநிதி கூறினார்.

### கேரளாவில் ஒரு வாரம் பள்ளிகள் மூடல்

கொச்சி, ஜூலை 3— கேரளா பூராவிலும் எல்லா பள்ளிகளையும், கல்லூரிகளையும் இன்றிலிருந்து ஒருவார காலத்துக்கு மூடிவைக்குமாறு கேரள அரசு உத்தரவிட்டுள்ளது.

கேரளாவில் மாணவர்கள் நடத்தி வரும் கிளர்ச்சியே இதற்குக் காரணமாகும்.

கேரளாவில் மாணவர்கள் திங்கள் கிழமையிலிருந்து வகுப்புகளுக்குச் செல்லாமல் போராட்டம் நடத்தி வருகின்றனர். எனவே மாநில அரசு முதலில் கடந்த வியாழக்கிழமையும் வெள்ளிக்கிழமையும் பள்ளிகளையும், கல்லூரிகளையும் மூடிவைக்க உத்தரவு போட்டது. போராட்டம் நீடிக்கும் என்று மாணவர் அறிவித்துள்ளதால் இன்றிலிருந்து மேலும் ஒரு வாரம் மூடிவைக்க அரசு உத்தரவு போட்டுள்ளது.

### வெள்ளிவிழா கொண்டாடும் சார்ட்டர்டு அக்கவுண்டன்ட் கழகம்

சென்னை, ஜூலை 3— இந்திய சார்ட்டர்ட் அக்கவுண்டன்ட் கழகம் வெள்ளி விழாவைக் கொண்டாடுகிறது. அது துவங்கப்பட்டு இன்றுடன் 25 ஆண்டு முடிவடைகிறது. நாளையிலிருந்து ஒருஆண்டு முழுவதும் வெள்ளிவிழா ஆண்டாகக் கொண்டாட முடிவு எடுக்கப்படுகிறது.

இதுகுறித்து விளக்கிய வெள்ளிவிழாகமிட்டி தலைவர் கோபால், இந்த ஆண்டில்பல நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடுசெய்யப்பட்டிருப்பதாகத் தெரிவித்தார்.

1975ம்ஆண்டு பிப்ரவரியில் காமன்வெல்த் அக்கவுண்டன்ட் மாநாடு நடத்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

சென்னையில் உள்ள வட்டாரக் கவுன்சில் கட்டடத்தின் துணைக் கட்டடம் எழுப்ப 5 லட்சம் ரூபாய் நிதி திரட்டப் போவதாக, வட்டாரக் கவுன்சில் செயலாளர் அசோக் சம்பத் கூறினர்.

கவுன்சில் தலைவர் சீனிவாசன், ஜகதீசன் ஆகியோரும் கவுன்சில் நடவடிக்கைகளை விளக்கிக் கூறினர்.

---

### 'மாடு தின்னும் மலையாளிகள்'

# கேரளத்துக்கு கறவை மாடுகள் கடத்தல்: மந்திரி கண்ணப்பன் வருத்தம்



பட்டுக்கோட்டை, ஜூலை 3– தமிழகத்திலிருந்து கறவை மாடுகளை கேரளாவுக்கு ஓட்டிச் சென்று கொன்று தின்று விடுகிறார்கள். இதனுல் தமிழ் நாட்டில் பால் உற்பத்திக் குறைந்து விடுகிறது என்று அமைச்சர் கண்ணப்பன் கூறினர்.

பட்டுக்கோட்டைக்கு வந்திருந்த அறநிலையத்துறை அமைச்சர் கண்ணப்பன் நிருபர்களிடம் கூறியதாவது:—

**தமிழில் அர்ச்சனை**

"தமிழ் அர்ச்சனைக்கு எதிராக சுப்ரீம் கோர்ட்டில் வழக்கு தொடர்ந்திருக்கிறார்கள். முறைப்படி அதை எதிர்த்து வழக்கு நடத்தப்படும்.

1971ம் ஆண்டு அறிக்கைப்படி தமிழ் அர்ச்சனையை எல்லா கோவில்களிலும் செய்ய வேண்டும் என்றும் விருப்பினுல் சமஸ்கிருதத்திலும் செய்யலாம் என்று தான் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

தமிழில் மட்டும்தான் அர்ச்சனை செய்யலாம் என்று உத்தரவு போடப்படவில்லை.

**கோயில் வருமானம் ரூ 9 கோடி**

1967-க்கு முன்பு 3½ கோடி வருமானம் உடையதாக இருந்தது இன்று 9 கோடியாக கோவில்களின் வருமானம் கூடி இருக்கிறது.

கடற்கரை, ஆற்றங்கரை ஓரங்களில் உள்ள கோவில்கள் பழுதடைந்து கெட்டுப் போகாமலிருக்க 'பென்காப்சுலின்' என்ற பூச்சு சுவர்களில் பூசப்படும் இதற்காக 'யுனெஸ்கோ'வை கேட்டிருக்கிறோம். இந்த வண்ணப் பூசசு ராமேசுவரம், ஸ்ரீரங்கம் கோவில்களில் பூசப்படும்.

1974—75-ம் ஆண்டில் ரூ 6 கோடி செலவில் 1500 கோவில்கள் புதுப்பித்து திருப்பணிகள் செய்யப்படும்.

**'மாடு தின்னும் மலையாளிகள்'**

கோவில் நிதியிலிருந்து பழனி, திருச்செந்தூர் கோவில்களில் கண் ஆஸ்பத்திரி, பிரசவ விடுதிகள் தலா 10 லட்சம் ரூபாய் செலவில் கட்டப்படும்.

**ஆஸ்பத்திரிகள்**

கறவை மாடுகளை கேரளாவிற்கு ஓட்டிச் சென்று அடித்துத் தின்று விடுகிறார்கள். இதனுல் பால் உற்பத்தி குறைகிறது. அம்மாதிரி கறவை மாடுகளைக் கேரளாவிற்கு கொண்டு செல்லப்படுவது தடுத்து நிறுத்தப்படும்.

ஜூலை 1ந்தேதி முதல் மதுரையில் உள்ள பால் பண்ணைகளை பால் பண்ணை வளர்ச்சி வாரியம் (கார்ப்பரேஷன்) ஏற்றுக்கொள்ளும்.

1 லட்சம் லிட்டர் பால் கொள்ளக்கூடிய யந்திரம் பொருத்தப்பட்டு மதுரையில் பால் பவுடர் தயாரிக்கும் தொழிற்சாலை நிறுவப்படும்.

**சாமி சிலை திருட்டு**

ஆலயங்களில் உள்ள சாமி சிலைகளை திருடுவோர் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்பட்டு கடும் தண்டனை விதிக்கப்படும்"

இவ்வாறு அமைச்சர் கண்ணப்பன் கூறினர்.




நெல்லிக்குப்பம் ஊராட்சி ஒன்றியத்தை அண்ணா கிராமமாக மாற்றியதை, முதல்வர் கருணாநிதி திறந்து வைத்தார்.

---

புது காங்கிரசுக்கு எதிராக

### இடதுசாரி கூட்டணி: சோஷலிஸ்டு கட்சி திட்டம்

புதுடெல்லி, ஜூலை 3— புது காங்கிரஸ் கட்சிக்கு மாருக நாட்டில் இடதுசாரி கட்சிகளின் கூட்டணியை உருவாக்க இடதுசாரிக் கட்சிகளின் மாநாட்டைக் கூட்ட சோஷலிஸ்டு கட்சி முடிவு செய்துள்ளது.

இடது கம்யூனிஸ்டு கட்சி, புரட்சிகர சோஷலிஸ்டு சோஷலிஸ்டு ஐக்கிய கேந்திரம்,பார்வார்ட் பிளாக், விவசாயிகள் தொழிலாளர் கட்சி உட்பட இடதுசாரிக் கட்சிகளை இம்மாநாட்டுக்கு அழைக்க அக்கட்சி முடிவுசெய்துள்ளது.

குறிப்பிட்ட விஷயங்களில் கூட்டாகச் செயல்பட வலது கம்யூனிஸ்டு கட்சி, இடது கம்யூனிஸ்டு கட்சி உட்பட மற்றகட்சிகளுடன் இருதரப்பு பேச்சுகளை நடத்தவும் சோஷலிஸ்டு கட்சியின் தேசியக் கமிட்டி முடிவு செய்துள்ளது.

ஜனதிபதி தேர்தல்:

### இடதுசாரி வேட்பாளரை நிறுத்த திட்டம்

ஹசாரிபாக் ஜூலை 3— ஜனதிபதி தேர்தலில் புது காங்கிரஸ் வேட்பாளருக்கு எதிராக எல்லா இடதுசாரி, ஜனநாயக கட்சிகளும் ஒன்று சேர்ந்து ஒரு வேட்பாளரை நிறுத்த வேண்டும் என்று புரட்சிகர சோஷலிஸ்டு கட்சியின் மத்தியக் கமிட்டி கோரியுள்ளது.

அவ்விதம் நிறுத்தப்படும் எதிர்க் கட்சி வேட்பாளர் வெற்றிபெற வாய்ப்பு இல்லாவிட்டாலும், போட்டி இருந்தாக வேண்டும் என்ற கொள்கை அடிப்படையில் இடதுசாரி எதிர்க் கட்சிகள் ஒருவரை நிறுத்த வேண்டும் என்று புரட்சிகர சோஷலிஸ்டு கட்சிப் பொதுச் செயலாளர் திரிதிப் சவுத்ரி கூறினர்.

பாதுகாப்பு விடுதியிலிருந்து ஜன்னலை உடைத்து தப்பியவர்கள்:

# 7 அழகிகளுக்கு போலீஸ்வலைவீச்சு

**சேலம், ஜூலை 3— பெண்கள் பாதுகாப்பு இல்லத்தில் இருந்த 7 அழகிகள், ஜன்னலை உடைத்து தப்பி ஓடிவிட்டார்கள். அவர்களை போலீசார் வலைவீசி தேடி வருகின்றனர்.**

சேலம் மார்க்கபந்து தெருவில் "பெண்கள் பாதுகாப்பு விடுதி" ஒன்று இருக்கிறது. வாழ்க்கையில் தவறிய பெண்களுக்கு மறு வாழ்வுக்கான தொழில் பயிற்சி இங்கு அளிக்கப்படுகிறது.

இதில், விபசார தடுப்பு சட்டத்தின் கீழ் பிடிக்கப்பட்ட 7 அழகிகள் வைக்கப்பட்டு இருந்தனர்.

**7 அழகிகள் யார் யார்?**

அழகிகளின் பெயர்கள் விவரம் வருமாறு:—

1. பாப்பாத்தி (வயது 19)
2. மாது (19)
3. அல்வம்மா (19)
4. ஆர். லட்சுமி (22)
5. எஸ். பழனியம்மாள் (20)
6. சரசா (22)
7. எம். லட்சுமி (22)

இவர்கள் 7 பேர்களும், பாதுகாப்பு விடுதியிலிருந்து இரவில் தப்பி ஓடிவிட்டார்கள். இரவு 10 மணிக்கு காவல்காரப் பெண் சுற்றிப் பார்த்தபோது, விடுதியின் ஜன்னல் உடைக்கப்பட்டு கிடந்தது கண்டுபிடிக்கப்பட்டது. அறைக்குள் இருந்த பெண்கள் யாரையும் காணவில்லை.

ஜன்னலை உடைத்து அதன் வழியாக 7 அழகிகளும் தப்பி ஓடி இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

**போலீஸ் வலைவீச்சு**

இதுபற்றி காவல்கார பெண்விடுதி காப்பாளர் செல்லம்மாளுக்கு தகவல் தெரிவித்தார். செல்லம்மாள், அஸ்தம்பட்டி போலீசில் புகார் செய்தார்.

தப்பி ஓடிய அழகிகளை போலீசார் வலைவீசி தேடிவருகிறார்கள்.

# ஐந்தாறு பேர்களுக்காக அல்ல தி.மு.க.கொள்கை: கருணாநிதி பேட்டி

**சென்னை, ஜூலை 3—"ஐந்தாறு பேர்களை மனதில் வைத்துக்கொண்டு, அவர்களுக்காக எந்தக் கொள்கையும் வகுக்கப்படுவதில்லை" என்று முதல் அமைச்சர் கருணாநிதி கூறினர்.**

தமிழ்நாட்டில் பூரண மதுவிலக்கு கொண்டு வருவது பற்றி நிருபர்கள், முதல்வரிடம் கேட்டபோது, கருணாநிதி இவ்வாறு கூறினர்.

இது குறித்து நிருபர்கள் கேட்ட கேள்விகளும், முதல்வரின் பதில்களும் வருமாறு:-

கேள்வி: பூரண மதுவிலக்கு பற்றி முடிவு எடுக்கப்பட்டு விட்டதா?

முதல்வர்: ஏற்கனவே பூரண மதுவிலக்கு பற்றிக் குழுவில் முடிவு எடுத்துத்தான் மீண்டும் முழுமையான மதுவிலக்கை அமுல்படுத்த வேண்டும் என்றும், அதை படிப்படியாக நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டதாகும்.

கேள்வி; ஒரு தொழில் அதிபர் பூரண மதுவிலக்கு பற்றி குறித்து கூறுகையில் சமீபத்தில் 2 சாராயத் தொழிற்சாலைகளுக்கு அனுமதி வழங்கி விட்டு திடீர் என்று பூரண மதுவிலக்கு என அறிவித்தால் குழப்பம் உண்டாக்குவதாக இருக்கிறது என்று சொல்லி இருக்கிறரே; அது பற்றி உங்கள் கருத்து என்ன?

முதல்வர்: ஐந்தாறு தொழில் அதிபர்களை மனதில் வைத்துக்கொண்டு அவர்களுக்காக எந்தக் கொள்கையும் வகுப்பது இல்லை.

கேள்வி: ஜனதிபதி பதவிக்கு பக்ருதீன் அலி அகமதை காங்கிரஸ் கட்சி அறிவித்து இருக்கிறதே?

முதல்வர்: அதுபற்றி தி.மு. கழக செயற்குழுவும், பொதுக் குழுவும்தான் முடிவு செய்ய வேண்டும். இப்போது ஒன்றும் சொல்வதற்கு இல்லை.

கேள்வி: எதிர்க்கட்சிகள் எல்லாம் சேர்ந்து ஜனதிபதி பதவிக்கு வேட்பாளரை நிறுத்தப் போகிறார்களா?

முதல்வர்: எனக்குத் தகவல் எதுவும் இல்லை.

கேள்வி: சென்னையில் பால் விலை உயர்த்தப்படுமா?

முதல்வர்; பால் விலை உயர்த்துவது பற்றி நிலைமைகள் பரிசீலிக்கப்படுகிறது.

கேள்வி: மழை பெய்து இருக்கிறதே. மின்வெட்டு நிலையில் எதுவும் முன்னேற்றம் உண்டா?

முதல்வர்: தஞ்சைபோன்ற பகுதிகளில்தான்பெய்து இருக்கிறது. மலைப் பகுதிகளில் மழை மிகக் குறைவு.

கேள்வி: சென்னையில் குடும்ப கார்டில் அரிசி வழங்குவதற்கு வருமான வரம்பு ரூ. 300-ல் இருந்து ரூ. 500 ஆக உயர்த்தப்படுமா?

முதல்வர்; மற்ற மாநிலங்களின் நிலைமையையும் இந்த மாநில நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்த்து திருப்தி அடைய வேண்டியதுதான்.

கேள்வி: மேட்டூர் தண்ணீர் குறைந்து வருவதில் தாமதம் ஏற்பட்டால், நெல் உற்பத்தி குறையுமா?

முதல்வர்: நிலைமைகளைப் பொறுத்திருந்து பார்க்க வேண்டும். இப்போதே கற்பனை செய்துகொண்டு பீதி அடையத் தேவையில்லை.

இவ்வாறு முதலமைச்சர் கருணாநிதி கூறினர்.

கருணாநிதி தகவல்:

### ராமரின் கிரீடம் உருவில் ராஜாஜி நினைவு மண்டபம்

மதுரை, ஜூலை 3—சென்னையில் அமைய இருக்கும் ராஜாஜி நினைவு மண்டபத்தின் முகப்பில் கோபுரமும், ராமர் கிரீடமும் அமைக்கப்படும் என்று முதல்வர் கருணாநிதி தெரிவித்தார்.

திருமங்கலம் ஜவகர் நகரில், ராஜாஜியின் முழு உருவச் சிலையை திறந்து வைத்து கருணாநிதி பேசினர்.

அப்போது அவர் குறிப்பிட்டதாவது:—

ராஜாஜி, மிகப்பெரிய விடுதலைவீரரும், தேசபக்தரும் ஆவார். மற்றொரு விடுதலை வீரரான ஜவகர்லால் நேருவின் பெயரால் அமைந்துள்ள நகரின் அருகே ராஜாஜிக்கு சிலை வைப்பது பொருத்தமான செயலாகும்.

சென்னை நகரிலும் ராஜாஜிக்கு நினைவு மண்டபம் கட்டப்பட்டு வருகிறது. அந்த மண்டபத்தின் முகப்பில் கோபுரமும், ராமரின் கிரீடமும் அமைக்கப்படும். ராஜாஜி சிறந்த ராமபக்தராக இருந்தவர் என்பது மட்டுமன்றி, இந்த நாட்டில் ராமராஜ்யம் ஏற்படவேண்டும் என்றும் விரும்பினர். ஆகவேதான் அவருடைய நினைவுமண்டபத்தை இந்த முறையில் உருவாக்கத் திட்டமிட்டிருக்கிறோம்.

இவ்வாறு கருணாநிதி கூறினர்.

தமிழ் நாட்டில் இங்குதான் முதன் முதலாக ராஜாஜியின் முழு உருவச்சிலை அமைக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

சிலை அமைப்பு விழாக் குழுத் தலைவரான பாலுசாமிதேவர் இந்தச்சிலை ரூ 10 ஆயிரம் செலவில் சலவைக்கல்லால் உருவாக்கப்பட்டது என்று கூறினர்.

அமைச்சர் ஓ. பி. ராமன், மேல்சபை பழைய காங்கிரஸ் தலைவர் ராசாராம் நாயுடு ஆகியோர் விழாவில் பேசினர்கள்.

### ரெயில் வண்டிகள் தாமதம்

சென்னை, ஜூலை 3—பேசின் பிரிட்ஜ் அருகே ஒரு ரெயில் என்ஜின் தடம் புரண்டதால் ஞாயிறன்று சென்னை சென்டிரல் ரெயில் நிலையத்திலிருந்து புறப்பட்டுச் செல்லும் ரெயில் வண்டிகள் 4 முதல் 5 மணி நேரம் தாமதமாகக் கிளம்பிச் சென்றன. சென்டிரலுக்கு வரவேண்டிய ரெயில்களும் இதே போல தாமதம் அடைந்தன.

தடம்புரண்ட என்ஜின் மீண்டும் தண்டவாளத்தில் ஏற்றப்பட்ட பிறகு போக்குவரத்து சீரடைந்தது.

கச்சத் தீவுப் பிரச்சினை

# அ.தி.மு.க.எம்.எல்.ஏ.க்கள் ராஜினாமா செய்ய ம. பொ. சி. கோரிக்கை

சென்னை, ஜூலை 3—கச்சத் தீவு பறிபோனதற்கு தி. மு. க. மந்திரிசபை ராஜினாமாச் செய்யவேண்டும் என்று கோரிய எம். ஜி. ஆருக்கு, ம. பொ. சி. பதில் அளித்துள்ளார்.

அப்படிக்கூறும் எம். ஜி. ஆர், தமதுகட்சியைச்சேர்ந்த 14 எம். எல். ஏ.க்களையும் முதலில் ராஜினாமா செய்யச் சொல்லத் தயாரா? என்று அவர் கேட்டார்.

லெட்சுமிபுரம் இளைஞர் சங்கத்தில் நடந்த கச்சத்தீவு பிரச்சினை பற்றிய கூட்டத்தில் ம. பொ. சி. பேசியபோது இந்த சவாலை விட்டார்.

கூட்டத்திற்கு தில்லைவில்லாளன் தலைமை வகித்தார். ம.பொ.சி.யோடு மூக்கையா தேவரும் அந்தக் கூட்டத்தில் பேசினார்.

ம. பொ. சி. பேசுகையில் கூறியதாவது:

கச்சத்தீவு பிரச்னை எந்த அளவுக்கு பரபரப்பையும், உஷ்ணத்தையும் உண்டாக்க வேண்டுமோ அந்த அளவுக்கு உண்டாக்கவில்லை. பெருபாரி பிரச்னையின் போது ஏற்பட்ட உஷ்ணம் இதில் உண்டாக வில்லை.

அப்படி ஏற்படாது என்று தான் ஒப்பந்தம் செய்து கொண்டு இருக்கிறார்கள். ஜன அபிப்பிராயத்தைக் கொன்று நீண்டநாள் ஆகி விட்டது.

கச்சத்தீவு தமிழகத்திற்கு உடைமைப் பிரச்னை. இந்தியாவுக்கு உரிமைப்பிரச்னை. உடமைக்காரன் ஏமாறலாம். உரிமைக்காரன் ஏமாறக்கூடாது. கச்சத்தீவு பிரச்னை தமிழகத்தின் தொகுப் பிரச்னை. இதில் கூட இங்கே எல்லா கட்சிகளும் ஒன்றுபட இல்லை.

காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட், இடது கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கு கட்சி மேலிடம் தான் இதுபற்றி முடிவு எடுக்க வேண்டும். டெல்லியும், மாஸ்கோவும், சீனவும் முடிவு எடுக்கவேண்டும்.

ஒரு காங்கிரஸில் யார் தலைவர் என்றே தெரியவில்லை. இன்னொன்றில் ஒருவரே எல்லாம்.

ராமாயணத்தில் ஏக நாயகன் ராமன். பாரதத்தில் யார் காப்பிய நாயகன் என்றுஇல்லாமல் எல்லோரும் காப்பியநாயகன். அதுபோல இரு காங்கிரசும் இருக்கின்றன.

ஒன்றிற்கு ஒரே தலைவர். இன்னொன்றில் ஆளுக்கு ஆள் கையெழுத்து வேட்டை. அவலட்சணங்களின் பிரதிநிதிகளாக இருக்கிறார்கள்.

காமராஜர் இதுபற்றி இன்னமும் வாய் திறக்கவில்லை. பிரச்னையை அவர் எப்போதும்சந்திக்கமாட்டார் நாங்கள் எல்லோரும் பேசி ஒரு உரு கொடுத்து விட்ட பிறகு முடிகிற நேரத்தில் வாய் திறப்பார்,

உடனே அவரது சிஷ்யர்கள் பார்த்தீர்களா காமராஜர் வாய்திறந்தார் முடிந்தது என்று பல்லாண்டுபாட ஆட்கள் இருக்கிறார்கள்.

கச்சத்தீவு பிரச்னைக்காக தமிழக மந்திரி சபை ராஜிநாமா செய்ய வேண்டும் என்கிறது ஒரு கட்சி. (அ. தி. மு. க.)

எந்தப்பிரச்னையாக இருந்தாலும் அவர்களுக்கு இடைகாலி ஆக வேண்டும்.

76-க்குள் முடிவு என்ன ஆடுமோ என்று கருதி இப்போதே உட்காரப் பார்க்கிறார்கள்.

தவறு இழைத்தவர்களை ராஜிநாமா செய்யக் கோர வேண்டும். ஆனால் இவர்கள் த டிக்கேட்கிறவர்களை ராஜிநாமாசெய்யசொல்கிறார்கள்.

...னடியாக டெல்லியைக் கண்டிக்கும் சொரணை உள்ள ஆட்சி இங்கு இருக்கிறது. இது இல்லாவிட்டால் கையெழுத்துப் போடும் ஆட்சிதான் அமையும்.

சட்டசபையைக் கலைக்க வேண்டும் என்று சொல்கிற (அ. தி. மு. க.) கட்சியைச் சேர்ந்த 14 எம். எல். ஏக்களும் முதலில் ராஜிநாமா செய்யட்டும்.

மத்திய அரசுக்கு சவாலாக ராஜநாமா செய்து பிரச்னைக்கு முடிவு காணலாமே.

பீகாரில் சட்ட சபையைக் கலைக்கக் கோரியவர்கள் முதலில் தாங்கள் ராஜிநாமா செய்து காட்டி இருக்கிறார்கள். அவர்கள் அரசியல் வாதிகள்.

கட்சத்தீவு இலங்கை அரசுக்கு சொந்தம் என்று சொல்ல முடியாது. அங்கே இருக்கும் கிருத்துவ மிஷினரி சொந்தமாக்கிக் கொண்டு இருக்கலாம்.

அதற்கு முன்பு அது சேதுபதி சமஸ்தானத்தில் இருந்தது. மிஷினரி சொந்தத்தை விட இதற்கு அரசியல் அந்தஸ்து அதிகம் இருக்கிறது என்றார் ம. பொ. சி.

## மாநில சுயாட்சிக்கு தூண்டுகோல்

மாநில சுயாட்சிக் கோரிக்கைக்கு கச்சத்தீவு பிரச்சினை தூண்டுகோலாக அமைந்து விட்டது. இதற்குப் பரிகாரம் காணுவதன் மூலம் மாநில சுயாட்சி கோரிக்கை தெளிவு பெறும் என்று தில்லை வில்லாளன் தெரிவித்தார்.

நேற்று மாலை லெட்சுமீபுரத்தில் நடந்த கச்சத்தீவு பற்றிய கூட்டத்திற்குத் தலைமை வகித்ததில்லை வில்லாளன் பேசியதாவது:—

கச்சத்தீவு உயிர் பிரச்னை. மாநிலங்களுக்கு அதிகாரங்கள் மிகக் குறைவாக இருப்பதால் மானத்தோடு இருக்க முடியாது. இதைத் தான் கச்சத்தீவு பிரச்னை உணர்த்துகிறது.

தமிழகத்தின் ஒரு பகுதியாக இருந்த கச்சத்தீவை தமிழக அரசைக் கலக்காமல் தமிழக உணர்ச்சியை துச்சமாக தூக்கி எறிந்துவிட்டு தத்தம் செய்து இருக்கிறார்கள்.

நாம் அதிக அதிகாரங்கள் கேட்கவில்லை. அரசியல் சட்டப்படி உரிய அதிகாரங்களைக் கேட்கிறோம்.

மாநில சுயாட்சிக் கோரிக்கைக்குத் தூண்டுகோலாக கச்சத் தீவு பிரச்னை அமைந்து விட்டது.

கச்சத்தீவு பிரச்னையில் நாம் காணும் தீர்வு மூலம் மாநில சுயாட்சி பிரச்னையும் தெளிவு பெறும் என்றார் தில்லை வில்லாளன்.

## திருமணம்

சென்னை, ஜூலை 3—சாரி அட்வர்டைசிங், உரிமையாளர் G. K. சாரியின் புதல்வனும், பாங்க் ஆப் மதுரா, ராயப்பேட்டை கிளையில் பணிபுரிபவருமான, நரசிம்மனுக்கும், M. சந்தானம் அய்யங்கார் புதல்வி விஜயலக்ஷ்மிக்கும், செய்யாறுக்கு அருகிலுள்ள புரசை கிராமத்தில் சென்ற திங்கட்கிழமை திருமணம் சிறப்பாக நடைபெற்றது. நண்பர்களிடமிருந்தும், உறவினர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகளும் ஏராளமாக வந்தன.

# நடிகர் சிவகுமார் திருமணத்தில் நடந்த சில சுவையான செய்திகள்

பிரபல திரைப்பட நடிகர் சிவகுமார் திருமணம் திங்கட்கிழமை காலை கோவை அருகில் உள்ள தண்டுக்காரன் பாளையத்தில் நடைபெற்றது. மணப்பெண் லட்சுமி பி. ஏ. பட்டதாரி. கோவை மாவட்டம் கவுண்டன்பாளையத்தைச் சேர்ந்த முத்துசாமி கவுண்டரின் மகள்.

இளமை, அழகு, திறமை மூன்றும் அமைந்த நடிகர் சிவகுமார் பத்திரிகையாளர்களிடம் தனி மதிப்பும், மரியாதையும் வைத்திருப்பவர். தனது திருமணத்திற்கு பத்திரிகை நிருபர்கள்வந்தே ஆகவேண்டும் என்று அதற்குரிய ஏற்பாடுகளை திருமணத்தின் முதல் ஏற்பாடாகச் செய்து முடித்து விட்டார்.

ஞாயிற்றுக்கிழமை மதியம் சென்ட்ரல் ரெயில்நிலையத்தில் பத்திரிகை நிருபர்கள் தங்களுக்குரிய இடங்களில் அமர்ந்திருந்தனர். வெஸ்ட்-கோஸ்ட் எக்ஸ்பிரஸ் புறப்படும் நேரம் நெருங்கியது. குறிப்பிட்டபடி ஒருசிலர் வரவில்லை. அதனால் பிலிம்நியூஸ் ஆனந்தன் என்ன செய்வதென்று தெரியாமல் பரபரப்புடன் யாராவது வருகிறார்களா என்று பார்க்கிறார்.

"இருங்கள்... டிக்கெட்டுகளைத் திருப்பிக் கொடுத்து பணம் வாங்கி வருகிறேன்" ஒரு நண்பர் டிக்கெட்டுகளை, வாங்கிக் கொண்டு ஓடுகிறார்.

அவர் சென்று சிறிது நேரம் ஆகிவிட்டதால் தேடிக் கொண்டு இன்னொருவர் போகிறார். இந்த சமயத்தில்-மணி ஒலிக்கிறது.

ரெயில் புறப்படுகிறது.

போனவர்கள் இருவரும் திரும்பவில்லையே என்று வருத்துடன் பேசிக் கொண்டிருக்கிறோம். ரெயிலில் அவர்கள் ஏதாவது ஒரு பெட்டியில் ஏறியிருக்கமாட்டார்களா — எதிர்பார்க்கிறோம்.

அரக்கோணம் ரெயில் நிலையத்தில் எங்கள் கேள்விகளுக்கு விடை கிடைக்கிறது. இருவரில் ஒருவரான 'மித்திரன்' ராமமூர்த்தி மட்டும் எப்படியோ ரெயிலில் ஏறி விட்டார். இன்னொருவர்—? அவருக்கு பதில் அவருடைய பெட்டி எங்களுடன் பயணம் செய்து திரும்பியது.

நடிகர் சிவகுமார் வாழ்க்கைப்பயணம் தொடங்கும் திருமண விழாவைக் காணச் செல்லும் பத்திரிகையாளர்களின் ரெயில் பயணம் சுவையாக இருந்தது. இடையில் ஒரு சோதனையும் ஏற்பட்டது.

### பட அதிபர் மயக்கம்

அரக்கோணம் தாண்டியவுடன் சோற்று மூட்டையை அவிழ்த்தோம். 'மதி ஒளி' சண்முகம் வீட்டிலிருந்து கொண்டுவந்த உணவு மிகவும் சுவையாக இருந்தது. ரசித்து உண்டோம். அதன் பின் மாலை சிற்றுண்டி. 'பிலிம் நியூஸ்' ஆனந்தன் கொண்டு வந்திருந்தார். அதை ஒரு கைபார்த்தோம்.

இரவு உணவை ஈரோடு ரெயில் நிலையத்தில் வைத்துக் கொள்ளலாம் என்றனர். அது வரை ஒரே சிரிப்பு—கொண்டாட்டம் தான். அத்தனைக்கும் சேர்த்து அங்கே சோதனை காத்திருந்தது.

அசைவ உணவுசிற்றுண்டிச் சாலையிலிருந்து 'சாப்பாடு... சாப்பாடு' என்று கூப்பாடு போட்டபடி பையன்கள் உலாத்தினர்.

நாக்கைச் சப்புக் கொட்டியபடி சாப்பாடு கொண்டு வரச்சொன்னோம். தட்டுகள் அழகாக அடுக்கி வந்தது.

எடுத்து வைத்துக்கொண்டு பார்த்தால்—

சோறு பார்க்கவே பயமாக இருந்தது. சாதத்தை எண்ணி வைத்தானா—இல்லை எடுத்து வைத்தானா என்று வியக்கும் அளவுக்கு கொழுக்கட்டைகள் போல் இருந்தது.

மனதைத் திடப்படுத்திக் கொண்டு சாப்பிட முயற்சித்தோம். நாக்கு, மூக்கு இரண்டும் ஒத்துழைக்க மறுத்தது. தயிராவது நன்றாக இருக்கும் என்று குடித்துப்பார்த்தோம். நான் மட்டும் சளைப்பேனா என்று அது வயிற்றைக் கலக்கியது. உணவுத்தட்டுகளைத் திருப்பிக் கொடுத்துவிட்டோம். இனி ஈரோடு ரெயில் நிலையத்தில் அசைவ உணவு சாப்பிட மனதால்கூட நினைக்கக் கூடாது என்பதில் மட்டும் எங்களுக்குள் எந்தவிதமான கருத்து வேறுபாடும் ஏற்படவில்லை. எங்கள் ஏகோபித்த முடிவிற்கு ஆதரவாக இன்னொரு சம்பவமும் நடந்தது திடீரென்று—

பட அதிபரும், 'மதிஒளி' ஆசிரியருமான சண்முகம் வாந்தி எடுக்க ஆரம்பித்தார். சிறிது நேரத்தில் அப்படியே மயங்கிச் சாய்ந்து விட்டார். அவர் முகத்தில் தண்ணீர் அடித்து, எப்போது கோவை வரும் என்று பதைபதைப்போடு காத்திருந்தோம். அடுத்து 'அலை ஓசை' மணி அவசரமாகச் சென்று திரும்பி, தனக்கும் ஈரோடு உணவு வேலை செய்கிறது என்று கூறினர். எல்லோருக்கும் பயமாகப் போய்விட்டது. நல்ல வேளை...

மற்றவர்கள் தப்பினார்கள். கோவை வந்ததும் இருவருக்கும் சிகிச்சை அளிக்கப்பட்டது. எல்லோரும் பட அதிபர் என். வி. ராமசாமிக்குச் சொந்தமான ஓட்டல் ஒன்றில் தங்கினோம்.

### திருமணமாம் திருமணமாம்

மறுநாள் திங்கட்கிழமை அதிகாலை 4½ மணிக்கு தனி பஸ் ஒன்றில் திருமணத்திற்குப் புறப்பட்டோம், கோவையிலிருந்து திருமணம் நடக்கும் தண்டுக்காரன்பாளையம் சித்தாம்மா கோயில் கல்யாணமண்டபம் சரியாக 40 மைல் தூரத்தில் இருக்கிறது. அவ்நாசி, செய்யூர் வழியாக காலை 6 மணிக்கு திருமண மண்டபத்திற்குப் போய்ச் சேர்ந்தோம்.

### பெருங் கூட்டம்

தண்டுக்காரன்பாளையம் ஒரு சின்ன கிராமம். அப்படியிருந்தும் திருமண மண்டபத்திற்குள்ளும் வெளியிலும் பெருங் கூட்டம் நெருக்கியடித்துக்கொண்டு நின்றது.

பட அதிபர் வி. சி. கணேச அய்யர் அந்த பெருங்கூட்டத்தில் பத்திரிகையாளர்களைப் பக்குவமாக உள்ளே அழைத்து செல்கிறார்.

மணமேடை மலர்களால் அழகுற அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. பட்டாடை உடுத்தி மணமக்கள் மாலையும் கழுத்துமாக அமர்ந்திருக்கின்றனர். பத்திரிகையாளர்களைப்பார்த்ததும் மணையில் அமர்ந்திருந்த புது மாப்பிள்ளை சிவகுமார் எழுகிறார். பரிவோடு 'எப்போது வந்தீர்கள், சாப்பிட்டீர்களா?' என்று கேட்டுவிட்டு அமர்கிறார். இந்தப் பணிவும், கனிவும்தான் அவரை வளர்த்திருக்குமோ?!

மணமேடைக்கு எதிரில் பட அதிபர் எம். எம். ஏ. சின்னப்பாதேவர், ஏ. பி. நாகராஜன், மேஜர் சுந்தர்ராஜன் ஆகியோரும், பத்திரிகையாளர்களும் அமர்ந்திருக்கின்றனர்.

சரியாக ...25 மணிக்கு தாலிச் சரட்டை எடுத்து புரோகிதர் சிவகுமார் கையில் கொடுத்தார். சம்பிரதாயத்திற்காக அதில் மஞ்சள் கயிறும் கட்டப்பட்டிருக்கிறது. கெட்டி மேளம்முழங்குகிறது. சிவகுமார் அதை வாங்கி மணமகள் கழுத்தில் கட்டுகிறார். மூன்று முடிச்சுகளையும் அவரே கவனமாக அழுத்தமாகப் பார்த்துப் பார்த்துப் போடுகிறார்.



படபலங்களில் மணமேடைகளில் நடித்தவர்தான் அவர். என்றாலும் அது நடிப்பு—இது வாழ்க்கை! வாழ்க்கையில் நல்லவர்களுக்கு ஒருமுறை மட்டுமே வந்துபோகும் திருநாள் அல்லவா இது! அதனால் தான் அத்தனை கவனம் சிவகுமாருக்கு.

### விசில் வாழ்த்து

என். எஸ். என். தியேட்டர்ஸ் நாடக குழுவினர் மணமேடை எதிரில் அமர்ந்து அடிக்கடி கேலிக்குரல் எழுப்பிக்கொண்டு கலகலப்பை ஏற்படுத்தினர்,

சிவகுமார் மணமகள் கழுத்தில் தாலி அணிவித்தபோது அவர்கள் விசில் ஒலி மூலம் தங்கள் வாழ்த்துக்களைத் தெரிவித்தனர்.

(தொடர்ச்சி நாளை வெளிவரும்)

### நீர் மட்டம்

சென்னை. ஜூலை 2—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 6·45 | மீட்டர் |
| பெரியாறு | 2·23 | ,, |
| வைகை | 12·92 | ,, |
| பாபநாசம் | 9·10 | ,, |
| கிருஷ்ணகிரி | 10·26 | ,, |
| சாத்தனூர் | 13·88 | ,, |
| மணிமுத்தாறு | 20·86 | ,, |
| பேச்சிப்பாறை | 3·20 | ,, |
| பெருஞ்சாணி | 9·20 | ,, |

# "வர்த்தகர் நலவாரியம்" அமைக்க அரசுக்கு வர்த்தகர் கோரிக்கை

கோவை, ஜூலை 3—வர்த்தகர்களின் நலன்களைக் காக்கவும், வர்த்தகத்தின் சிறப்பை வளர்க்கவும் "வர்த்தகர் நல வாரியம்" ஒன்றை அரசாங்கம் ஏற்படுத்த வேண்டும் என்று தமிழ்நாடு வர்த்தகர் கழகம் கேட்டுக்கொண்டுள்ளது.

இந்த வாரியம் செயல்பட விற்பனை வரி வசூலில் சிறு பங்கை அதற்கு ஒதுக்கும் வகையில் விற்பனை வரிச் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்றும் தமிழ்நாடு வர்த்தகர் கழகம் கேட்டுக்கொண்டுள்ளது.

தமிழ்நாடு வர்த்தகக் கழகத்தின் நிர்வாகிகள் கூட்டம் கோவையில் இக்கழகத்தின் தலைவர் ஈரோடு கேசவலால் காளிதாஸ் சேட் தலைமையில் கோவையில் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் தமிழக வர்த்தக பிரமுகர்கள் பலரும் கலந்து கொண்டனர்.

ஆரம்பத்தில் வர்த்தகக் கழகத்தின் பொதுச்செயலாளர் குடந்தை பி. சண்முகம் அனைவரையும் வரவேற்றார்.

கேசவலால் காளிதாஸ் சேட் பேசுகையில் விலைவாசி உயர்வுபற்றிக் குறிப்பிட்டார். "விலைவாசி ஏற்றம் இன்றுள்ள பெரும் பிரச்னை. அரிசி விலையும் அளவுக்கு மீறி ஏறி வருகிறது. விலைவாசி உயர்வுக்கு வியாபாரிகள் காரணம் அல்ல.

அனைத்து இந்திய ரீதியில் ஏற்படும் பொருளாதார சிக்கல்கள் விலைவாசி உயர்வுக்கு காரணமாகவும் இருக்கின்றன என்று அவர் சொன்னார்.

"விலைவாசி உயர்வுக்குத் தீர்வுகாண அனைத்திந்திய ரீதியில் மத்திய அரசு முயற்சி மேற்கொள்ள வேண்டும்" என்றும் கேசவலால் காளிதாஸ்சேட் சொன்னார்.

"பொருட்கள் மீது எந்தக் கட்டத்திலும் கட்டுப்பாடுகள் இருக்கக்கூடாது. திடிரென்று கட்டுப்பாடுகளைக் கொண்டு வருவதும், திடீரென்று அவற்றை அகற்றுவதும் விலைவாசி உயர்வுக்குக் காரணமாகிறது. சுயேச்சையான வர்த்தகம் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தும் என்பதை அரசு உணரவேண்டும்" என்றும் அவர் சொன்னார்.

பொதுச்செயலாளர் பி. சண்முகம் பேசுகையில் பல முனை வரி விதிப்பிலுள்ள எல்லா பொருட்களுக்கும் 3 சதவிகிதத்துக்கு உட்பட்ட ஒருமுனை வரியை விதிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

இக் கூட்டத்தில் திருச்சி கே. மாயாண்டி மற்றும் பலர் பேசினர்.

கூட்டத்தில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

"வர்த்தகர் நல வாரியம்" அமைக்கப்பட வேண்டும் என்பது அத்தீர்மானங்களில் ஒன்றாகும்.

தமிழக அரசு 59 பொருட்களுக்கு ஒருமுனை வரி விதித்துள்ளதற்காகவும், விற்பனை வரி விலக்கு வரம்பை 50 ஆயிரமாக உயர்த்தியுள்ளதற்காகவும் பாராட்டு தெரிவித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

விலைவாசியைக் குறைக்க தமிழக அரசு உடனடியாக விவசாயிகள், பொருள் தயாரிப்பாளர்கள், வியாபாரிகள் ஆகியோர் அடங்கிய மாநாட்டைக் கூட்டவேண்டும் என்று தமிழ்நாடு வர்த்தகர் கழகம் ஒரு தீர்மான மூலம் கேட்டுக்கொண்டுள்ளது.

வர்த்தகர்கள் குடும்பக் கட்டுப்பாட்டைப் பின்பற்ற வேண்டும் என்று கோரியும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# விஷ ஊசி வழக்கு

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

டிருந்தேன். சுமார் 6 மணிக்கு ஹோட்டலிலிருந்து ஒரு முஸ்லிம் பெரியவர் இறங்கிவந்துக் கொண்டிருந்தார், ஜபருல்லா அந்த ஆளை ஜாடை மூலம் எனக்கு காட்டினான். நான் அந்த பெரியவரை பின் தொடர்ந்துசென்று, தாவூத்திற்கு அடையாளம் காட்டினேன், நானும், தாவூத்தும் அவரைப் பின்தொடர்ந்த போது அந்தப் பெரியவர் ஒரு டாக்சியில் ஏறிக்கொண்டிருந்தார். அந்த ஆளை சாரதிக்கு அடையாளம் காட்டினேன்.

அவர் டாக்சியில் சென்றுக் கொண்டிருந்தார். வைத்தி, சாரதி இருவரும் என்னையும் ஏற்றிக்கொண்டு வேறொரு டாக்சியில் பின்தொடர்ந்தனர்.

எழும்பூர் ரெயில் நிலையத்தில், ராமேஸ்வரம் செல்லும் ரெயிலில், அந்தப் பெரியவர் தனியாக உட்கார்ந்திருந்ததை சாரதிக்கு காட்டினேன்.

### காகிதப் பொட்டலத்தில் ஏராளப் பணம்

வைத்தியும், சாரதியும் அவரிடம் சென்று ஏதோ பேசி அழைத்து வந்தனர். அந்தப் பெரியவர் வைத்திருந்த பையில் உள்ள காகிதப் பொட்டலத்தில் ஏராளமாக பணம் இருந்தது.

பிறகு அவர்கள் அந்தப் பெரியவரை ரெயில்வே நிலையத்திற்கு வெளியே அழைத்து வந்தனர். என்னை வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டனர். ஒரு வாரம் கழித்து தாவூத், சாரதி கொடுத்ததாக 10 ரூபாய் கொடுத்தார்.

இந்த சம்பவத்திற்கு 10 நாள் கழித்து, தாவூத் என்னை ஹோட்டல் க்ரஸெண்ட் அருகே அழைத்துச் சென்றார். அங்கு சாரதி, வேணு, அயூப், மஜீத் ஆகியோர் இருந்தனர். அப்பொழுது ஜபருல்லா வந்து 'பார்ட்டி விளக்கு வைத்துத் தான் புறப்படுவார்' என்று கூறினர்.

எங்கள் ஏற்பாட்டின்படி, நான் பூங்கா அருகே நின்று கொண்டிருந்தேன். சுமார் 7 மணி அளவில் 25 வயது மிக்க ஒரு வாலிபர் வந்து கொண்டிருந்தார். ஜபருல்லா சைகைமூலம் அவரை எனக்கு அடையாளம் காட்டினான் நான் வேணுவிற்கு காட்டினேன். வேணு சாரதிக்கு காண்பிக்க, சாரதி அந்த ஆளிடம் ஏதோ பேசி டாக்சியில் ஏற்றிக் கொண்டு போய் விட்டார்.

(சாட்சிராமநாதன் புகைப்படத்தை அடையாளம் காட்டினார்.)

### 3 ஆயிரம் சன்மானம்

இரண்டு மூன்று தினங்கள் கழித்துவைத்தி, சாரதி இருவரும் என் வீட்டிற்கு வந்து 3,000 ரூபாய் சன்மானம் கொடுத்தனர். அந்தப் பணத்தில் 1971-ம் ஆண்டு ஜூன் மாதம் 2-ம் தேதி திருமணம் செய்துகொண்டேன்.

1971-ம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஒருநாள், சாரதியும், வைத்தியும் காரில்வந்து, வேணுவின் முகவரியைக் கொடுத்து மிருகக்காட்சி சாலையருகே வந்து சந்திக்கச் சொன்னதை வேணுவிடம் சென்று சொன்னேன்.

1971-ம் ஆண்டு மார்ச் மாதத்தில் ஒருநாள் சாரதியும், வைத்தியும் வந்து, வேணுவை மறுநாள் காலை 10 மணிக்கு ஓட்டல் டிபிராட்வே அருகே வந்து சந்திக்கும்படி சொல்லச்சொன்னார்கள். நானும் அவ்விதமே வேணுவிடம் சொன்னேன்.

1973ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 10-ந் தேதி ரகசியப் போலீசார் வந்து என்னை விசாரித்தனர்.

இவ்வாறு அவர் தன் சாட்சியத்தில் கூறினர்.





# கணக்குக் காட்டாத அ.தி.மு.க.வின நக்கு எஸ்.டி.எஸ். 7 நாள் கெடு

சென்னை, ஜூலை 3—திருச்சியில் நடைபெற்ற அ. தி. மு. க. மாநாட்டு வசூல் கணக்குக் காட்டாத அ.தி.மு.க. அமைப்பாளர்களுக்கு, அ.தி.மு.க. எம். பி.யான, எஸ். டி. சோமசுந்தரம் 7 நாள் கெடு விதித்துள்ளார்.

திருச்சி மாவட்ட அ. தி. மு. க. மாநாடு, கடந்த மாதம் 29, 30 ஆகிய தேதிகளில் நடைபெற்றது தெரிந்ததே.

அந்த மாநாட்டில் 3 அண்டாக்கள் நிறைய எம். ஜி. ஆர். பண வசூல் செய்தும் கூட, ரூ. 10 ஆயிரம் தான் வசூல் ஆகியது என்று செய்தி வெளியாகி இருந்ததும் தெரிந்ததே.

இதனால் பணத்தை எண்ணியவர்கள் மீது அ. தி. மு. க. தலைமை சந்தேகப்படுவதாகக் கூறப்படுகிறது.

அ. தி. மு. க. உறுப்பினர் சேர்ப்பதில்கூட தில்லுமுல்லுகள் நடந்திருப்பதாக எம். ஜி. ஆரே, அ. தி. மு. க. பொதுக்குழுவில் குற்றம் சாட்டியிருந்தார்.

அதேபோல, திருச்சி மாவட்ட அ. தி. மு. க. மாநாட்டு நன்கொடை ரசீதிலும் தில்லுமுல்லுகள் நடந்திருக்கலாமென்று அ.தி.மு.க தலைமை கருதுவதாகத் தெரிகிறது.

மாநாடு முடிந்து 5 தினங்கள் ஆகியும் இன்னும் சரிவரக் கணக்குக் காட்டப்படவில்லை என்று தெரிகிறது.

எனவே, அ. தி. மு. க. கொள்கை பரப்புச் செயலாளரான எஸ். டி. சோமசுந்தரம் எம். பி. இது குறித்து இன்று அவசரமாக வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில், ஒருவாரம் கெடுவுக்குள் அமைப்பாளர்கள் அனைவரும் கணக்குக் காட்ட வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்.

அவர் அறிக்கை வருமாறு:-

திருச்சி மாநாட்டு நன்கொடை ரசீது புத்தகங்கள் பெற்றுச்சென்று இன்னமும் கணக்கு கொடுக்காத கழகத் தோழர்களும் அமைப்பாளர்களும் இதற்கு மேலும் காலந்தாழ்த்தாமல் 7—7—74-க்குள் கண்டிப்பாக திருச்சி மாவட்ட தலைமைக் கழகத்தில் முறைப்படி கொடுத்திடுமாறு வேண்டுகிறேன்.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S Press, No. 4, South Bank Road, Madras 600028 and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S. V. G. Sowrirajulu
Honorary Editor: N. Muthukumarasami